உத்தமர் போற்றிப் புகழும்
முத்தமிழ்க்ஷேத்திரத்தைச் சார்ந்த,
சிறுவாலை ஜெமீன் சமஸ்தானம்
அம்பலத்தாடி,
கோபாலகுலதிலக ஸ்ரீமான்

வித்வானந்த பாஷ்ய,
**வீ. எஸ். வீரணக்கோனரவர்கள்**
இயற்றிய
**சம்பூரண சங்கீத**

# கோவலன் சரித்திரம்.



இரண்டாம் பாகம்.







மதுரை
புதுமண்டபம், புத்தக வியாபாரம்,
**S. வேணுகோபால் நாயுடவர்களால்**
வெளியிடப்பெற்று,



...ரா மீனாக்ஷி விலாஸ் பிரஸில்
பதிப்பிக்கப்பெற்றது.

...ட்] 1929 [விலை அணா 4

உ

உத்தமர் போற்றிப்புகழும்

முத்தமிழ்க்ஷேத்திரத்தைச்சார்ந்த

சிறுவாலை ஜெமீன் சமஸ்தானம்

அம்பலத்தாடி

கோபாலகுலதிலக ஸ்ரீமான்

வித்வானந்த பாஷ்ய

வீ. எஸ். வீரணக்கோனாரவர்கள் இயற்றிய

சம்பூரண சங்கீத

# கோவலன் சரித்திரம்.

இரண்டாம் பாகம்

---

## காட்டுப் பாதை மார்க்கம்

(டாபர் இரக்க இரக்க ஓடிவந்து கோவலனைச் சந்தித்து கூப்பிடுகிறான்)

ஐயா செட்டியாரே இந்தாருங்க இந்தாருங்க உம்மைத்தானையா! ரெம்ப அவசரம். இந்த நிருபத்தைப் பார்த்து விட்டுப் போங்க.

(ஓடிக் கோவலன் கையில் கொடுக்கிறான்)

(கோவலன் காகிதத்தைப் பார்த்ததும் அடியற்ற மரம்போல் திடீரென்று விழுந்து)

வ-ம்—ஹா மாதவி! நீயும் போனாயா?

டா-வ-ம்—ஐயோ! என்ன செய்யலாம் எழுந்திருங்கள் பாபம்.

கோ—(எழுந்துகொண்டே) ஹா

சுதேச முகம்மதலி என்ற வர்ணமெட்டு.

இராகம்-இந்துஸ்தான்தோடி—தாளம் ஆதி.

பல்லவி.

மடிந்தாளோ மாதவியும்

வாழ்க்கையின் உதவியும் (மடிந்)

அநுபல்லவி.

முடிந்தாளோ வாழ்வு தாண்டி

முறுவல்வதனி அரவு தீண்டி (மடிந்)

சரணம்

அடைந்தாளோ அமரர் பதி
ஐயோ யெனக்குக் கதி
யாயிருந் தவள் சதி
மாயமாக இத் ததி (மடிந்)

தொகையரா

மாதவளாங் கண்ணகி மரித்தாளெனக்கேட்டே
மனம்வாடி வருகும்போது
பாதைவழிதனிலே யென் மாதவியும் இறந்ததாக
[illegible]க்கேட்டே னிப்போது

பாட்டு.



பாதி மரத்தில் தொட்டு
பற்றிய கொப்பும் விட்டு
பாதம் மிதி கொப்பையும்
பாதகன் விட்டேன் பட்டு (மடிந்)

ராசவிசுவாசலாலா என்ற வர்ணமெட்டு.

இராகம் இந்துஸ்தான்—தாளம் ஆதி

பல்லவி.

மாதவியும் என்னைவிட்டு மாண்டனளோ ஐயோ மாண்டனளோ (மா)

அநுபல்லவி.

மாதவிப்பாக மயங்கிநான் நோக (மா)

தொகையரா

சீதேவி போன்றிடும் மனைவியாங்கண்ணகி
செத்திடுந்தருண மென்றே
வேதனையாயேகையில் மாதவியு மிறப்பதாய்
விஷயமும் வந்ததின்றே

பாட்டு

மிதிகொப்பும் பிடிகொப்பும் விட்டதுபோலே
பதிதனிலாகினேன் நட்டமிதாலே
விஞ்சமனந் துடித்து
நஞ்சரவங் கடித்து (மா)

வ-ம்—ஹா ஈசனே! பட்டகாலிலே படும் என்ற பழமொழியை என்னிடமே உலகத்துக்கு நிரூபித்துக் காட்ட எண்ணி விட்டனை போலும்? கண்ணகி யிறந்துவிடுவாளென்ற கவலையோடு கதறிக் கொண்டு செல்லும் வழியில் மடிமேல் இடிவிழுந்தாற்போல திடீரென்று மாதவியும் மடியுந்தருணமென்று மாணவோலை வந்ததே. ஹா! இந்தப்பேரிழவுகளையெல்லாம் யாரிடத்திற்போய்க் கூறி முறையிடுவேன் மரத்திலேறி மிதி கொப்பையும் பிடி கொப்பையும் விட்டவனை யொப்ப ஆதாவற்றந்தரமானேன் மற்றும். அங்கு போகாவிட்டால் அவள் மடிவாள் இங்கு போகா விட்டால் இவள் முடிவாள் அந்தோ ஈசனே! இருதலைக்கொள்ளி எறும்புபோல் என் மனம் பாதவிக்கின்றதே என் செய்வேன் அரவு தீண்டியவர்கள் ஐந்தாறு நாட்களுக்குப் பின்னும் விஷ மிறங்கிப் பிழைத்து விடுவதாக அநுபவப் பிரஸ்தாபம் ஆதலால் மாதவியாவது விஷமிறங்கி வாழும் மார்க்கத்தைச் செய்ய விரைந்து செல்வோம் அவளாவது பிழைக்கட்டும்

(திரும்பி வேகமாய்ப் போகிறான்)

## திருக்கடையூர் மாதவி வீடு.

(மாதவி சும்மா இருப்பதைப் பார்த்து]

ஆறுமா ஐயோ நான் என்ற வர்ணமெட்டு.

கண்ணி.

பேதையே மனம் பீதியடைய வைத்தாய் வாதையே
பிடிவாதமாய் படுபாதக
கடிதாசியும் விடலாமோடி (பே)

வ-ம்—என்ன பேசாமல் இருக்கிறாய் அடி மாதவி!

மான்குச்சரியா—என்ற வர்ணமெட்டு.

பல்லவி.

ஞாய மிதுவோ? ஞாய மிதுவோ?
நாகப்பாம்பு தீண்டினதால் சாகப்போறே னென்றெழுத (ஞா)

மா. ஷை

ஆமென் மன்னவா ஆமென் மன்னவா
அந்தரங்கமாய் நீர் செய்த தந்திரங் காணாதுபோனேன் (ஆ)

அநுபல்லவி.

கோ—நானென்னவோ செய்தேனடி மானேயிம்மோசமேனடி (ஞா)
மா—ஆனாற் பதுமை யெரிந்து போனதேனோ நேரிருந்து (ஆ)

சரணம்

கோ—ஆயிழையே யிது யா துந்தெரியாது
ஆனாலுந் தோஷமில்லை போய் நானிப்போது
மாயமாய்ப் போனதுபோல் மற்றுமொன்றுதப்பாது
வார்த்துத்தருவேனதைநேர் பார்த்துக்கொள்ளுவாயென்மீது

பல்லவி.

நேயமுடனே நேயமுடனே
நீ தருவா யிங்குவிடை மாதவியே யேதுதடை (நே)

மா-வ-ம்—இவ்விதம் நீர் செய்வீரென்று நான் கொஞ்சமேனும் எண்ணவில்லையே இப்படித் தெரிந்திருந்தால் உம்மை வீட்டு வாசற்படி தாண்டவிட்டிருப்பேனோ? நான் பொற்பதுமை கேட்டதற்கு பொய்ப்பதுமை கொடுத்துச் சென்றிருக்கிறீரே. உம்மை யெப்படி நம்புவது. ஆ. அம்மாடி என்ன மோசம்!

கோ-வ-ம்—மாதவி! இதன் காரணம் உண்மையாகவே யெனக்குத் தெரியாது ஆனாலும் இதுபோனாற் போகட்டும்

மா-வ-ம்—உமக்கு விடை கொடுத்தனுப்பிவிட வேண்டுமோ?

கோ-வ-ம்—அப்படியல்ல சொல்லுமுன் பதறுகிறாயே இதுபோனாற் போகட்டும் நான் போய்த் திரும்பி வந்து உனக்கு யெப்படி வேண்டுமோ அப்படியெல்லாம் செய்து கொடுக்கிறேன் ஆதலால் விடைதந்தனுப்பிவை.

மா-வ-ம்—அவ்வளவுதானே இதிருக்கட்டும் அதிருக்கட்டும் அதிருக்கட்டும் இதிருக்கட்டும் எனக்கு விடை கொடு. இதுதானே பழைய பாடம் இனிமேல் விடையாவது பெடையாவது இன்னும் உம்மை நம்பி மோசம் போவேனென் றெண்ணுகிறீரோ? மறுபடியும் யென்னை யேமாற்றி விட்டு ஓடிப்போவதற்குச் செய்யுந் தந்திரம் இதுவென் றெனக்கு நன்றாய்த் தெரியுமே.

கோ-வ-ம்—கண்ணே மாதவி! அப்படி மட்டும் என்னை நீ ஒரு போதும் எண்ணாதே. அவ்விதம் நான் உன்னை ஏமாற்றி விட்டுப்

போகிறவனுக இருந்தால் நீ பாம்பு கடித்து இறக்கப்போகிருய் என்ற கடிதத்தைக் கண்டவுடன் ஏன் கதறிக்கொண்டு காற்றினும் வேகமாக வந்து சேருகிறேன் காதலீ என்னை யவ்விதம் சந்தேஹிக்காது பூரணமாக நம்பி விடைகொடுத்தனுப்ப வேண்டுகிறேன் பொற்கொடியே!

மா-வ-ம்—ஓஹோ! அப்படியானுல் அவஸ்யம் போகத்தான் வேண்டுமென்கிறீர் போலும்?

கோ-வ-ம்—பெண்ணே. நீயே சொல். போகவேண்டாமா? போகத்தான் வேண்டும்.

மா-வ-ம்—அப்படியானுல்

கடுக்கன் மோதிரம் என்ற வர்ணமெட்டு.

கண்ணிகள்.

ஜொலிக்குந் தெரிப்பும் சோபிதம் பெறுகாப்புமோதிரமும்
சுந்தரப்பதக்கத்தையும் தந்தால்தான் தருவேன் விடை (ஜொ)

கோ—சோதனை யோதிரு மாதவி யேதரு வேனிதோ நீயே பெற்றுக்கொள்.

(ஆபரண களைக் கழற்றித் தந்துவிட்டு)

கண்ணிகள்.

ஆபரணவகை யாவுந் தந்தேனினி யாவது நீ விடைதாவையடி

மா—ஆஹாஹா நீராங்கு போகவென்றுலும
தாடை கழற்றிக்கொடு மிப்படி

கோ—உந்தன் மனம் போலே எந்தனுடைகளைத்
தந்தேன் பெற்று விடைதந்தனுப்பே

மா—உத்தமரே யிங்கு பத்துலக்ஷம் பவுன்
இத்ததி தந்தால் விடை கொடுப்பேன்

கோ—உழல்கின்றன னழையென்றெனை எதிர்கொண்டு நீ
மொழி விண்டனே உண்டோ பொருளெந்தன் கை தனிலே.

மா—ஓஹோ இல்லாவிட்டால் யாமென்ன செய்யலாம்
ஊருக்குப் போகா திருந்து விடும்.

கோ—ஒண்டொடியே அங்கு போனதும் பொருளை
உண்மையாய்க்கொண்டுவந்து தருவேன்.

மா—ஓதிடுவீரீசனுணே நாதா நீரிப் போதே
கோ—ஈது சத்யம் பொன் தராது சாத முண்மேனன் மாதே
(கையடிக்கிறான்)
மா—இனியது சரிசரி புறப்படும் புறப்படும் விரைவாகவே.

---

மா-வ-ம்—சீக்கிரம் திரும்பிவந்து விடவேண்டும்.
கோ-வ-ம்—அப்படியே சென்று வருகிறேன் கண்மணீ.
(போய்விடுகிறான்)

காவிரிப்பூம்பட்டினம் கோவலன் வீடு.

(கோவலன் வீட்டினுட் பிரவேசிக்கிறான்)

கண்ணகி—(எழுந்து வணங்குகிறாள்)

கருவினுருவாகிவந்து என்ற மெட்டு.

கண்ணிகள்.

அருமையாகவே மகிழ்ந்து திருமணமன்றே புரிந்த
ஆளனே உமது பாத நமஸ்காரம்
அரிவையைப் பிரிந்தே ஓர்பன் னிருவருடமான தாலிங்
கன்புடனழைத்தேனிங்கு அமர்வீரே.

வ-ம்—பிராணேசா! அடியாள் கண்ணகி. நமஸ்கரிக்கின்றேன்.

கோ-வ-ம்—ஆஹா. இதென்ன. விபரீத விந்தை! ஹாம்! (யோசித்து) என்னை அந்த மாதவியும் இந்தக் கண்ணகியும் இவர்களிருவரும் விளையாடும் "பந்து" என்றே எண்ணிவிட்டார்கள் போலும் ஆஹா! இவ்விதமில்லாமலா பெண்களின் வாடையேகூடாதெனப் பெரிதும் வெறுத்து வனத்தை நாடிச்செல்கின்றனர் துறவிகள். "சேலைகட்டியமாதரை நம்பினால் தெருவில்நின்றுதியங்குவரே" என்ற ஆன்றோர்மொழியும் பிழைபடுமோ அல்லவே அதுபோல்

"பழனிநாதன் பரப்ரமாதன்" என்ற வர்ணமெட்டு.

இராகம்-சங்கராபரணம்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

மகளிர் நேசம் மிகவும் மோசம்
மாயாவி லாச பாசம் (மகளிர்)

(மகுடங்கள்.)

மதோன் மதம் பெற நமை யினு
மதோ கதம் புரி நம னெனு (மகளிர்)

வரம்பைக் கடந்த　　கெடுமதி
நிரம்பத் தொடர்ந்த　　விடமுதி　　(மகளிர்)

மன மோகன　　மிகு ஜீவிய
மெனுமோர்வினை　　யக மேவிய　　(மகளிர்)

மாதலத்தினி　　லாகு புற்புத
காதலைத்கரு　　மோக கற்பித　　(மகளிர்)

வஞ்சமிக்க நெஞ்சுதிக்கு　　நீடு தந்த்ர
இன்சொலுக்கு ஞஞ்சவைக்கு நீடுமந்த்ர　　(மகளிர்)

வாஸ்தபத்தை யே கெடுத்து　மாயவித்தை
சூஸ்திரத்தி　லே கிடத்து　பாய மித்தை(மகளிர்)

மையேறிய வரி　　விழியர் பிந்த
பொய்யே உருவென　　உலகில் வந்த　　(மகளிர்)

மட்டற்றிடு　　வட்டப்புவி தனி
லெட்டுத்திசை தொட்டுறப்பவி சனி　　(மகளிர்)

அநுபல்லவி.

நிகழு　வாழ்வில்　　நின்றிவ ரோடு
நீடிட　வென்றுமேலே　　கேடிலுங் கேடு　　(மகளிர்)

சரணம்.

பூரண வாரிப்　　புனலாழங்கண் டாலும்
பூவையர் நெஞ்சாழப்　　போக்கைக் காணார்மேலும்
வீரண காவிய　　வீக்ஷணய மே சாலும்
விந்தை மிகுந்திடு　　மிந்த்ரஜாலம்　போலும் (மகளிர்)

வ-ம்—"இருதாரம் ஒரு நாளும் கொள்ளவேண்டாம்" என்ற நல்லுபதேசப்பொன்னுரை நம்மால் நிராஹரிக்க தக்கதோ?

ஷை பல்லவி.

இரண்டு தாரம்　　என்றும் விசாரம்
யேற்பட்　டிடும்　　அ　　பாரம் (இரண்டு)

வசனம்—ஆதலால் உலகத்திலே உயர்வான வாழ்வு எதுவெனில்?

ஷை பல்லவி.

யதி சந்யாசம்　　அதி விசேஷம்
ஆம் வானப்பிரஸ்த　　வாசம்　(யதிசந்யா)

வ-ம்—(யோசித்து நின்று பின்) ஹூம். சரீ. "சென்றதைக்கருதேல்" என்றபடி நடந்தபின் குளிரை நினைந்து வருந்துவதிற் பிரயோஜனமில்லை. (கண்ணகியைப் பார்த்து) கண்ணகீ. இப்படியும் கடிதம் விடுக்கலாமோ?

கண்-வ-ம்—பிராணபதீ! தாங்கள் என்னை அறிவறியாத ஐந்துவயதில் மணமுடித்துப் பன்னிரண்டாண்டாகியும் என்னைப் பராமுகம் செய்து தாசி மாதவியே தஞ்சமென்று தங்கிவிட்டதால் உம்மைக் கண்டு களிக்கவே இவ்வாறெழுதினன் நாதா! நான் செய்த அபராதத்தை மன்னித்து அதனாலேற்பட்ட மனத்துயரையும் மாற்றும்படி மன்றாடி வேண்டிப் பிரார்த்திக்கின்றேன் கண்ணாளா! சரண். (வணங்குகிறாள்)

கோ-வ-ம்—கண்ணே! ஊழ்வினைப்பயன் யாரை விட்டது. ஊழிற் பெருவலி யாவுள! அனைத்தும் அவன் செயல் இனி யிதைக் குறித்து நீ கவலுறாதே காதலீ!

கண்-வ-ம்—நாதா! தாங்கள் பசியோடிருக்கிறீர்கள் ஆதலால் சென்று போஜனம் செய்துவிட்டு வரலாம் வாருங்கள்.

கோ-வ-ம்—அப்படியே செய்வோம்.

(உள்ளே போனதும் கண்ணகி சாதம் படைக்கிறாள் சாப்பிட உட்கார்ந்த கோவலன் போஜனத்திற் கை வைத்ததும் திடீரென் றெழுந்து விடுகிறான்)

கண்-வ-ம்—ஹா!

மானேய வனந்தலங்கை என்ற கண்டிராஜா நாடக வர்ணமெட்டு.

இராகம்-பியாகு-தாளம். ஆதி.

கண்ணிகள்.

நாதா இதுவென்ன சாத முண்ணாமலிப்
போதிலெழுந்தீரிப் பேதை எந்தன்
மீது தவறாக ளேதுற்றாலும் பொறுத்
தாதரித்தாள்வீர் பாதம் பணிந்தேன்.

கோ—
ஷி
பேதமில்லாத வென் மாதர் மணியே உன்
மீது குற்றங்குறை யாது மில்லை
வாதைக்கடன் கார ருனேனதாலிங்கு
சாத முண்ணுவிதக் நீதேமொல்லை.

கண்—
ஷி
மன்னு கடன் பட்டோர் இந்நானில மீது
அன்ன முண்ணுரோயீ தென்ன விந்தை
இன்ன கடனது இன்னருக்கீவதென்
றென்னிடங் கூறில் தேறுவேன் சிந்தை.

கோ— என்னுருயிர் நேரும் மின்னே யதை யிங்கு
உன்னிடத்தே சொல்வேன் உண்மையுடன்
வன்ன மாதவியாங் கன்னியவளுக்குச்
சொன்னேன் பத்துலக்ஷம் பொன்னே கடன்.

க-வ-ம்—ஹா! என்ன? மாதவிக்கா? பத்துலக்ஷம் பொன்னு? எதற்காக?

கோ-வ-ம்—ஆம் ஆம். கண்ணகீ. பதருது கேள் தெரிவிக்கிறேன். கண்ணே! நீ அனுப்பியிருந்த கடிதத்தைக்கண்டு கதறி உன்னிடம் வருவதற்காக நான் அவளிடம் விடை கேட்க அவள் பலவித நிபந்தனைகளின் பின் பத்துலக்ஷம் பொன் கொடுத்தாலன்றிச் செல்ல விடை கொடுக்கமாட்டேனென்று வற்புறுத்தினுள் அத்தருணம் என்னிடம் பொருளில்லாததால் ஊர் சென்று பொன் பத்துலக்ஷத்தையும் கொடுக்காமல் சாதம் புசிப்பதில்லையென்று சத்தியம் செய்து கொடுத்ததின் பேரில் என்னை யிங்கு அனுப்பி வைத்தாள் அந்தச் சத்தியம் இப்போது என் ஞாபகத்திற்கு வந்ததால் போஜனம் அருந்தாமல் எழுந்து விட்டேன் மாதவிக்கு நான் தந்த சத்தியத்தை நிறைவேற்ருது அன்ன முன்பேனுகில் கொடிய நரகத்தையடைய நேருமன்றே?

கண்-வ-ம்—என்ன. ஆஹா. (ஆக்ரோஷமாய்)

(ஒப்பேனேன்றவள் சோன்னளா)
என்ற கண்டிராஜா நாடக வர்ணமெட்டு.
கண்ணிகள்.

அப்படியும் அவள் தடுத்தாளா?
ஆணை நீர் செய்த பின் விடுத்தாளா?

7-வது பக்கம் 8வது வரி "மூடமந்த்ர" 21வது வரி "வீட்சண்ய"

அக்ரம மேவிய துற்குண வேசியும்
அவஸ்தைகள் பலவுங் கொடுத்தாளா?

வசனம்—ஹா! என்ன அந்யாயம் என்ன அந்யாயம். நாதா!

ஷை கண்ணிகள்.

என்னை நீர் வந்துபார்ப் பதற்காக.
ஈரைந்துலக்ஷம் பொன் தந்தேக.
ஏற்குமோ ஞாயம் கேட்கவே யிங்ஙனம்
ஈகுவீர் விடையவ ளிடம் போக. (அப்படியும்)

வ-ம்—ஹா. நாதா! இதென்ன அந்யாயம். தாங்கள் என்னை வந்து பார்ப்பதற்காகப் பத்துலக்ஷம் பொன் தந்து தான் போகவேண்டுமென்று சொல்ல அந்த வேசைச்சிறுக்கிக்கு என்ன அவ்வளவு. ராங்கி? பிராணபதீ! ஒரு விடை சொல்லுங்கள் இப்பொழுதே அங்கு சென்று அவள் தலைமயிரைப் பிடித்து நெட்டி கையால் நசுக்கிக் கசக்கிப் பிழிந்துவிட்டு வந்து விடுகிறேன். ஹூம்.

கோ-வ-ம்—கண்ணகீ! நீ இவ்வாறு சினங்கொள்வது சரியல்ல கண்ணே! அது அவளுடைய ஜாதிக்குரிய குணம். "எய்தவ ரிருக்க அம்பை நோவதிற் பிரயோஜனம் என்ன?" ஆதலால் நான் செய்து வந்த சத்தியப்படி அவளுக்குப் பொன்னைக் கொடுத்துப் போஜனம் புசிப்பதே முறை. "ஆறுவது சினம்." கோபம் பாபம்" என்பதை நீயும் அறிவை கோகிலமே!

கண்-வ-ம்—நாதா அப்படி யானாலும்

(நாதா இதுவென்ன என்ற பாட்டின் தொடர்)

தாசிகட் காடவர் வாசா லகமாகப்
பேசிப் பிரிந்த பின் தேசமீது
மோச உருவான வேசையர்க்குச் சொன்ன
காசைத் தராவிடில் தோஷமேது

கோ—

ஷை

நேசியே கூறுவேன் "மோசம் நாசம்" என்ற
வாசகத்தினுப தேச மொழி
ஈசன் முதல் மற்ற நீசர் வரையிலும்
பேசியதை மாறி லே சொல் பழி. •

வ-ம்—கண்ணே. சத்யம் நித்யம். அன்றோ காசினியில்.

கண்-வ-ம்—அது உண்மையே. ஆயினும் மோசமே உருவான தாசிகளிடத்தில் சத்தியத்தை எண்ணுதல் சரியல்ல. நாதா!

கோ-வ-ம்—நுண்ணறிவு மிக்க கண்ணகி யென்னும் பெண்மணியே! அவ்விதமல்ல உலகத்திலே இன்னாரிடத்தில்தான்சத்தியத்தைக் கொண்டாடலாம் இன்னாரிடத்தில் தான் சத்தியத்தை மாறலாம் என்று சாஸ்திரத்தில் எழுதியிருக்கவில்லை. ஈசன் முதல் நீசன் வரையும் வாய்மைந்யாயம் என்பது ஒன்றே. "சத்யத்தை நிறைவேற்றல்" என்பது எவ்விதத்தும் மறுக்கற்பாலதன்று. ஆதலால் நீ யணிந்துள்ள ஆபரணங்களில் ஏதாவதொன்றை யீவையானால் அதை விற்றுக் கடனைத் தீர்த்துவிட்டுப் பிறகு வந்து போஜனம் புசிப்பேன். காதலீ!

விருத்தம்.

ஒண்ணகை வதன மேவு முத்தமியான பத்னி
கண்ணகை மாதே இன்று கழறுவேன் கேளாயிங்கு
திண்ணம் மாதவிக்குச் சொன்ன செம்பொன்னை யீய்ந்திடாமல்
உண்ணேனுன் சாதமிங்கு வுறுதியாய் நம்புவாயே.

கண்—நேயமிக்க நாயகரே! அவ்வளவு விலை தாளக்கூடிய ஆபரணமொன்று மென்னிடத்திலில்லையே.

கோ—  இராகம்-தேசிகப்பியாக்—தாளம் ஆதி.

கண்ணிகள்.

தந்திடடியிங்கு  உந்தன் சிலம்பொன்று
தாசியவள் ருணம்  தீர்க்க வின்று.
 தாதவிழ் பூங்குழன் மாதே உரைப்பேனுன்
 பாதமதிலுற்று  ஜோதி யுமிழ்வதில்  (தந்)

கண்.  ஷை

எந்தனுடனே  பிறந்ததிச்சிலம்பு
ஈர்த்துக்கழற்றவென்றாலோ பெரும் வம்பு
 யீது கால் விட்டுவ  ராது நாயகா விப்
 போது வந்தால் தர  வேது தடை யுண்மை (எந்தன்)

வ-ம்—நாதா! இச்சிலம்பு நான்பிறக்கும்போது என்னுடன் இதுவும் கூடவே பிறந்ததாதலால் இதைக் கழற்றுவதற்குத் திருகாணியேயில்லை! யிதை யெப்படிக் கழற்றுவது?

கோ. (வீடலால வாயிலாய் என்ற தேவார வர்ணமெட்டு)

ஈசன்பாதந் தன்னை மனத் தெண்ணியே நீ கழற்றில்
மாசிலாத சீர் சிலம்பு வந்து விடும் மாதே.

கண். நேசமேவு லாசகுண நீங்கள் சொன்னவாறே
மாசர்வேசன் கருணை செய்தான் வாங்கும் நீரிப்போதே

(கொடுக்கிறாள்)

அசரீரி—இந்தச் சிலம்பை விற்கும் பொருட்டு மதுரைக்கு மட்டும் போகவேண்டாம். போனால் விபத்து நேரும்.

கண்-வம்—(பதறி) பிராணபதீ கேட்டீர்களா அசரீரி வாக்கை.

கோ—கற்பின் மகிமை மிக்க பொற்கொடியே! அதை யெல்லாம் கவனிக்கவேண்டிய சமயம் இதல்ல. அவ்விதம் மதுரை தவிர இதைக்கொண்டு விற்பதென்றால் நாட்கள் பல செல்லும் அன்றியும் மற்ற ஊர்களில் என்னைத் தெரிந்த பேர் அநேகரிருக்கின்றனர் ஆதலால் வேறு நகர்களிற் போய் வீண் அலைச்சலையும் அவமானத்தையும் ஏற்பதைத்தவிரப் பயன்படாதென்பது திண்ணம். மேலும் இவ்வளவு ஏறிய தொகைக்கு ஆபரணங்கள் வாங்குபவர்கள் மதுரையைத்தவிர வேறு இடங்களில் இருப்பதாக எனக்கு நிச்சயப்படவில்லை. ஆகவே அந்தச் செல்வச் சிறப்போங்கிய தென்மதுரை சென்று சீக்கிரமாக விற்று வந்துவிடுகிறேன் விடைகொடு கண்மணீ!

கண்-வ-ம்—அவ்விதமாயின் நானுங்கூடவே வருகிறேன் நாதா!

கோ—மங்கள குணகரப் பெண்கள் நாயகமே! சிலம்பை விற்பதற்காக நான் பலரிடத்திலும் செல்லவேண்டிவருமாதலால் பெண்பாலான நீ வருதல் கூடாது நான் சென்று அதிவிரைவில் விற்று மீளுகிறேன். கண்மணி! நீ இங்குதானேயிரு துயரேன் இதற்காக.

கண்ணகி

(தசரதராஜ குமாரா—என்ற தசாவதார நாடக வர்ணமெட்டு)

இராகம்-இந்துஸ்தான் காப்பி—தாளம் ஆதி.

பல்லவி.

அதிகுணநேசம துள்ளா தடந்தோளா மலர்த்தாளா பன்னுளாய்

அநுபல்லவி.

பதிதனில் பிரிந்துபின் பற்றி வந்தேனே
பாங்கியினும் பிரிந்தாற் பாதவிப்பேனே
கதிதுணை யுமையன்றிக் காணில்லன் நானே
கலையைப்பிரிந்தபிணைபோலே ஆவேன்மேலே பிரிவாலே யிக்காலே (அ)

கோவலன் ஷை பல்லவி

மதிமுகதேசுறுமாதே வருந்தாதே புவிமீதே யிப்போதே

அநுபல்லவி.

விதிவசம் யெவரையும் விடுமோ யென் மானே
வியன் மதுரையிற் சென்று விற்றதுந் தானே
ததிவருகவே விடை தாவை செந்தேனே
தாமதமேனுத வாதே இந்த வாதே புரியாதே ஆந்தீதே (மதி)

வ-ம்—கண்ணே! வர்த்தகத்துக்குச் செல்லும் ஓர் வைஸியன் மனை வியையும்அழைத்துச்செல்வது வணிகமுறைக்கழகல்ல. மேலும் அவ்விதம் பெண்டுகளை யழைத்துச் செல்வது இடைஞ்சலுக் கிலக்காய காரியச்செயல் என்பதை நீயும் அறியாததோ காதலீ! தாமதிக்காது விடை கொடு தையலர் நாயகமே. (கண்ணகி முன் பரிதாப நிலையில் நின்று வேண்டுகிறான்)

கண்— ஷை பாட்டுத் தொடர்

என்ன என்ன சொன்னபோதும் இங்கு நான் தனித்தே
இருப்பே னென்பதைமட்டும் இதயத்தில் நினைத்தே
பன்முறை பன்னிப்பன்னி பகர்வதை விடுத்தே
பண்பாயெனையும் கூட்டியின்றே,செல்வீர் நன்றே,பணிகின்றே,னின்றே(அ)

(மிகுந்த எளிய பரிதாப நிலையில் இருகரங்களையும் ஏந்தி யேங்கியபடியே முழந்தாளிட்டுப் பணிகிறாள்)

கோ-வ-ம்—(சற்றொன்றுந் தோற்றாது நின்று தெளிந்து) (தனக் குள்) சரி இனி இவளிடம் வாதிப்பது பலன் தராது. தந்திர மாய் ஏமாற்றிச் சென்றால்தான் செல்லலாம் (திரும்பி) கண்ணகீ! எழுந்திரு. கவலுறாதே உன் மனோபீஷ்டப்படியே நாம் இருவருமே செல்வோம். அதனால் அதற்கு வேண்டிய கட்டமுது கட்டிக்கொண்டுவா.

கண்-வ-ம்—(எழுந்து) இதோ கொண்டுவருகிறேன் இங்கேயே யிருங்கள்.

கோ-வ-ம்—சரி கண்ணகி போய் விட்டாள் அவள் திரும்பி வருமுன் ஊரைவிட்டுத் தாண்டி விடுவோம். (வேகமாய்ச் செல்கிறான்)

கண்— (கண்ணகி கொஞ்ச நேரத்தில் கட்டமுதோடு வந்து) நாதா! நாதா! (கூப்பிடுகிறாள் பதில் இல்லை ஏங்கி) (நின்று அண்ணாந்துபார்த்து கற்பின்மகிமையாலறிந்து) என்னை நாயகர் ஏமாற்றி விட்டு அன்றோ சென்று விட்டார் சரீ. அதற்குத் தக்க சூழ்ச்சி செய்கிறேன் (மேனோக்கிக் கரங்குவித்து) ஈசனே நான் என் மணாளரை உண்மையோடு நம்பி தேடி பார்க்கவிரும்புவது உறுதியானால்

வெண்பா

சீர்வளரும் என்நாதன் தீவிரமாய்ச் செல்லுகின்ற
கார்வளையும் அவ்வழியில் கல்லதினால்—ஓர்பதுமை
காவதனில் நிற்கக் கருதுகின்றே னனந்த
பூவையவள் மாதவியைப் போல்.

---

## மதுரைக்குச்செல்லும் வழி.

கானகம்

(சென்றுகொண்டிருக்கும் கோவலன் மாதவிபோல் நிற்கும் ஓர் சிலையைக்கண்டு)

கோ-வ-ம்—மாதவீ! (நன்றாயுற்றுப் பார்த்து) ஓஹோ. மாதவியே. (நெருங்கி) ஹே. மாதவீ! ஈதென்ன நம்பாமை. நான் இனி மீண்டும் வரமாட்டேன் என்றே உறுதியாய் நினைத்து விட்டனை போலும்? அவ்விதம் நினையாவிட்டால் இவ்விதம் வந்திருக்க மாட்டாயல்லவா? உன் கடனைத் தீர்த்தபின்பே சாதமுண்ணுவதென்று இந்தச் சிலம்பை விற்கப் புறப்பட்டு வருகிறேனே. அப்படியிருக்க

இராகம்-நாகவராளி—தாளம்-ஏகம்-ஆதி

கண்ணிகள்

காதலீயிங் குற்ற தேதடி. இக்
கானில் வந்த வற்றை ஓதடி
பேதலித்துத் தேக நோக
பீதியின்றி யேதனியாய் . (காதலீ)

வ-ம்—கண்மணி மாதவி! "கடன்பட்டோருக்குக் கையோ வாயோ" என்றதுபோல் நான் தான் என் காலம் இக்கடிய கொடூர சூர்ய வெப்பத்தின் சுவாலை வீசும் இந்நடு மத்தியானத்தில் நடந்தலை கிறேன். சீமாட்டியாகிய நீ. கண்ணாட்டியாகிய நீ. கோமாட்டி யாகிய நீ. பெருமாட்டியாகிய நீஇந்த வனவழிநடக்கப் பிரமேய மில்லையே இன்பரச ஏந்திழையே! ஐயோ

ஷை பாட்டுத்தொடர்

வெய்யல் தீயைப்போ லெரியுதே உன்
மெய்யோ கல்லைப்போல் தெரியுதே
தையலே உன் ருணத்துக்காகச்
சத்தியத்தை மாறுவேனோ? (காதலீ)

(நெருங்கி யிரு கரங்களையும் நீட்டித்தழுவி)

வ-ம்—ஓஹோ யீதென்ன! (நன்கு பரர்த்து விட்டு) இல்லை இல்லை. (மறுபடியும் தழுவிக் கல்லாயிருக்கக்கண்டு)

ஷை பாட்டு

ஆவலாய்த் தழுவிடக்கல் லாக நிற்குதே.
யாருமிதைக் கண்டாற் கேலி யாக்க வைத்ததே.
தேவியாகுங் கண்ணகியாள் செய்கைகள் தானோ
தீர்த்தபது மையிக்காட்டில் சேர்ந்தது மேனோ? (ஆவ)

---

இவைகளை யெல்லாம் மறைவிலிருந்து பார்த்துக்கொண்டிருந்த

கண்-வ-ம்—நாதா! இதென்ன? பேஷ்நன்றாயிருக்கிறது. கல்லுக்கும் சரீரத்துக்கும் உள்ள வித்யாசங்கூட தெரியவில்லைபோலும்? வெய்யலினாலேயோ?

கோவலன்-வ-ம்—(திரும்பி) பெண்ணே. அறிந்தேன். இவை யாவும் உன் செய்கைகளென்று, கண்ணகீ! உனக்கு எவ்வளவோ சொல்லியும்! "ஏமாற்றிவிட்டு வந்தும்" நீ ஒரே பிடிவாதமாய் வந்து விட்டாய். சரி! செல்வோம்.

அம்பா ளேன்பால் என்ற வர்ணமெட்டு.

இராகம்-அடாணா-தாளம்-ஆதி.

பல்லவி.

வாராய் மானே.
மயங்காம லேயென் பின்னே. (வாரா

அநுபல்லவி.

நேராய்த் தானே.
நில்லா ம லேயென்பின்னே (வாராய்)

சரணம்.

மா மேன்மை பூண்ட பீடு
மா தா மீ னாட்சி நீடு
ஸ்ரீ மான்மிய பாண்ட்ய நாடு தனைத்
தேடி. வழி கூடி. விரைந் தோடி நாடி (வாராய்)
(போகிறார்கள்)

மற்றொரு புறமாக.

கண்-வ-ம்—ப்ராணபதி! இதுவென்ன. எவ்வளவோ தூரம் நடந்து விட்டோம் இன்னும் பாதி வழிகூட வரவில்லை யென்கிறீர்களே! நாதா! எனது பாதங்களோ வெய்யலின் கொடுமையால் கொப்ப ளங்கண்டு விட்டன. நாவோ தாகத்தினால் வறண்டு விட்டது. ஆதலால்

தயவிலாததேன வஞ்சம் என்ற வர்ணமெட்டு.

இராகம்-சுருட்டி—தாளம்-ஆதி

பல்லவி.

நடக்க முடியவில்லை நாதா என்ன
நான் செய்வேன் மலர்ப்பாதா நீதா யீதோ (நடக்க)

அநுபல்லவி.

அடக்க முடியாத் தண்ணீர்த் தாகம் மிக
ஆனதா லே யிக் கானகத்திலே
அயர்ந்தனன் இயைந்து வந் தினி வழி (நடக்க)

சரணம்.

ஏதினிச் சுவடொன்று மெடுக்க வே லாது
எந்தன் மீது தாங்கள் சினங் கொள்ளக்கூடாது
வாதனை தீர்ந்திடத் தண்ணீர் கொண்டு
வந்து யிங்ஙனம் தந்திடில் வன
வழி நடந்திடுவேனான் ததியினி (நடக்க)

என்று அப்படியே சோர்வடைகிறாள். அவளை யிருகாங்களாலு ணைத்துக்கொண்டு

வ-ம்—ஏ எங்கள் குலத்தை ஈடேற்றவந்த பெண்கள் நாயகமே. நீ வருந்தாதே! ஹா. கண்மணீ! மயங்காதே. இன்னும் கொஞ்ச தூரம் சிரமத்தைப் பொருட்படுத்தாது மெள்ள நடந்து வா. இதோ தெரியும் குளிர்ந்த தோப்பில் சற்று தங்கி யிளைப்பாறிக் கொண்டிரு. நான் சென்று ஜலங் கொண்டுவருகிறேன். அருந்திப்பின் வெய்யல் தணிந்ததும் செல்வோம்.

கண்-வ-ம்—நாதா! அப்படியே. சென்று சீக்கிரமாக ஜலங்கொண்டு வாருங்கள்.

(கண்ணகி யிருக்க கோவலன் செல்கின்றான்)

## அடர்ந்த காடு.

கள்வர் தலைவன் தோற்றம்.

தில்லாலங்குடி தில்லாலங்குடி என்ற வர்ணமெட்டு.

கண்ணிகள்.

ஜில்லா வெங்கினும் வல்லானென்கிற
உல்லாசபயில் வான் களவில்
பொல்லாத பயல் நான் திருடர்
எல்லார்க்கு மியல்வேன் ஜோர்
தில்லா லங்குடி ஜோக்குப் பாட்டு
சொல்லா லே முயல் வேன் சிறையே
இல்லா கும் செயல் தான். பலே பல்லாகும் ஒயில் தான்.

வ-ம்—ஓ என்ன. இன்னங் நம்ப ஆசாமிப்பசங்களைக் காண்லே கூப்டுவோம். (திரும்பி) அடே டேய். வாலே

2-வது திருடன். ஷை பாட்டுத்தொடர்.

தேட்டை போட்டு கோட்டையுள்ளே
பூட்டை யுடைத்திடுவேன் பல பல
மூட்டை யடித்திடுவேன் அதைக்கொண்டு
காட்டையடுத்திடு வேன் பிறகு
நாட்டை விட்டு வெளிக்கிளம்பி
மாட்டைப் பிடித்திடுவேன் வீரண்ணா
பாட்டைப் படித்திடுவேன் ஆள்க்கண்டால்
ஓட்ட மெடுத்திடுவேன். (தேட்டை)

வ-ம்—அண்ணாத்தே. ராம் ராம்.

முதல் திருடன்— சரீ. யெங்கேடா. அந்தப்பசங். (திரும்பி) அடேடேய்

பச்சமலெ பவளமலெ என்ற வர்ணமெட்டு.

கண்ணி.

ஜெகமெங்கினும் புகழ்படைத்த திருட சிங்கம் நானே அப்பா.
திருட சிங்கம் நானே. ராஜ திருட சிங்கம் நானே. மிகு
தீர வீர சூர னென்னும் பேரும் படைத்தேனே. (ஜெ)

வ-ம்—அண்ணுத்தே. சலாம் சலாம் ராம் ராம்.

முதல்-திரு—சரீ. யெங்கேடா. அந்தச் சிங்கக்குட்டிப் பசங்.

ஷை மெட்டுத்தொடர்.

பகலில் கொள்ளையடிக்குந் தைர்ய பக்காத்திருடன்பேரன் ராஜா
முக்கா திருட்டுக்காரன். அப்பா. சர்க்கார் மதித்த பேரன் வீரண்ணு
பாட்டைப்பாடித் தேட்டை போட பூட்டை யுடைக்கும் வீரன்.

தெம்மாங்கு.

மாயாடே கறுப்ப வீரா வாங்கடாடே தேட்டை போட
யீயாத லோபிகள் வீட்டை இடித்துக் கொள்ளை யடித்து வருவோம்
எடுத்தடாதுப் பாக்கி அன்னிக்கி
நடுத்தெருவது பாக்கி

(ஆட்டம்)

பல்மணி வேல். பல்மணி வேல் பல்மணி வேல் பல் பலே பலே
பல்மணி வேல்

முதல் திருடன்—அடே அண்ணுத்தேங்களா! நம்ப பேசிக்கிண்டாப்
லே பொறப்படணும்டா என்னு சொல்றீங்கே!

எல்லாரும்—அத்துக்குத்தானே வந்தோம்

முத-திரு—அடே அந்தாலே. யாரோ ஒரு பொம்மணுட்டி குந்திக்னு
அய்துக்கிருக்காப்லேயிர்க்கே. இன்னுண்டு கேப்போம்வாங்கடா

மு-தி—(கண்ணகியை நெருங்கி) இந்தா குட்டீ. ஒன்னத்தானே நீ ஆரு

கண்ணகி-வ-ம்—ஐயா! நான் ஒரு வழிப்போக்கி! பெண்பிள்ளை.

2-வது திருடன்—ஏ. குட்டீ. பொம்ப்லே. சர்த்தாங் நீ ஆரு. எங்கே
வந்தே.

முத-திரு—அடாடாடாடாடா. அடே அண்ணாத்தே! இந்தப் பொம்ப்லே என்னா அயகாத்தாங் இரக்றுங்றேங் பாரேங் இவ பேசறதுங் முய்க்கிறதுங் நவையெல்லாங் ஜொய்க்கிறதுந் தான் பார்ங்றேங் (கண்ணகியை நெருங்கி) இந்தவரே! புள்ளே! நீ ஆரு இங்கே இன்னாத்துக்கிர்க்றே

கண்-வ-ம்—அண்ணா! நான் காவிரிப்பூம்பட்டினம், நானும் என் நாயகரும் மதுரைக்குப்போகிறோம். இப்போது எனக்குத் தாகத்துக்குத் தண்ணீர் கொண்டுவரப் போயிருக்கிறார் அவர். மதுரை எவ்வளவு தூரமிருக்கு மின்னும்?

மு-தி—ஓகோ! அப்புடியா! ஆனா கண்டபடி இந்த நவை யெல்லாம் என்துக்கு காதிலேயும் கய்த்துலேயும் போட்டு மாட்டிச் செமந்துக்னு இக்றே. கயட்டி என்க்ட்டதந்தூட்டு எங்கூட. வர்றியா போவலாம்.

கண்-வ-ம்—(தனக்குள்) இவர்கள் செய்கைகளையும் வார்த்தைகளையுங் கவனிக்குங்கால் கள்வர்கள் போறறோற்றுகின்றது தனிமையாயிருக்கும் நாம் என் செய்வோம். ஆ! திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை.

மு-தி—இன்னா புள்ளே என்னமோ மொன மொன இங்றே. நானும் பெரியநல்ல, அழகான, ஜோக்கான, சீரான, பேஷான, ஆசாமி தானே அதுனாலே. நீ சொன்ன பசங்வாணுங் என்னோடே.

இராகம்-தேசிகம்-தாளம்—ஆதி.
அரைக்கண்ணித்தத்தகம்

வாடி வாடி குட்டி
கண்ணகி—அட. ஓடி போடா மட்டி
திருடன்—வந்தன மிங்ஙனந் தந்தனங்கிட்டி (வாடி)
கண்—உந்தனிணவியே நைந்திடா தெட்டி (ஓடிப்)
திரு—வையா தடி மானே.
கண்—நைவா யடா தானே.
திரு—வம்பு நீ செய் யாதே
கண்—வெம்பு வா யிப் போதே
திரு—அடி-மலாயாமல் நில் பலா பலே பல் (வாடி வாடிகுட்டி

வ-ம்—ஏ! குட்டீ. இன்னா. ரொம்பத் தள்க்குப்பண்றியே. அத்தெல்லாங் ஒதுவாது நீ போட்டுக்கினு இர்க்றநவைங்களே

கயட்டிக் கொடுத்துட்டுப்போரியா அல்லாட்டி இப்புடியே ஓரே தூக்காத் தூக்கிக்னு போட்டுமா?

கண்-வம்—(தனக்குள்) இனி இவர்களிடம் வாதுசெய்தால் முறட்டுத் தனம் செய்வார்களன்றிவிடார்கள் இந்தத் துஷ்டர்கள் கேட்ட படி நகைகளையாவது கொடுத்துவிடுவோம் (திரும்பி) உங்கள் இஷ்டப்படியே நகைகளை வாங்கிக்கொண்டு என்னைத் தொந்தரவு செய்யாது செல்லுங்கள்.

(நகைகளைக் கழற்றிக் கொடுக்கிறுள்)

திருடர்—அல்லாத்தையும் ஒன்னுகூட வுடாமே கயட்டு.

மரத்திலிருந்த திருடன்—அடே அண்ணுத்தே கய்த்திலே யின்னுங் என்னமோ கடக்குடோ. ஆமடா ஆமா தாலியும் சரடுண்டா.

மற்ற திருடர்—கயட்டு புள்ளே கயட்டு அத்தேயுமிங் காட்டு.

கண்ணகி—(பதறி உக்ரத்தோடு) அடச்சண்டாளப் பாவிகாள்!

வெண்பா.

விலைபோலத் தாலிதனை வேண்டினே னுங்கே
தலை கீழாய் வௌவால் போல் தானே—நிலையாவாய்
பொல்லாக் கயவகுணப்—புல்லர்காள் நீவிர் நேர்
கல்லாகப் போவீரிக்கால்

அப்படியே மரத்தின் மேலிருந்தவன் வௌவாலாகவும் மற்ற திருடரெல்லாம் கல்லாகவும் ஆகிவிட்டனர்.

கோ-வ-ம்—(தண்ணீர் கொண்டு விரைந்து வந்து) பொற்பு மிக்க கற்புக்கனி கலனுகிய கண்ணகி! இதோ குளிர் ஜலம் கொண்டு வந்திருக்கிறேன் பருகித் தாகந்தணி கண்மணீ. (தண்ணீரைக் கொடுத்துவிட்டுத் திரும்பி) பெண்ணே! சற்று முன் நான் தண்ணீர் கொண்டுவரச் செல்லும்போதி யாதொரு விசேடமும் இல்லாதிருந்த இந்த இடத்திலே தற்போது ஏதோ சிற்சில கற்சிலைகள் விச்சித்திரமான செயல்களோடு நிற்கக் காண்கின் றேனே. காரணம்?

கண்-வ-ம்—இவைகளைத்தவிர. (மரத்தை உயரக்காட்டி) அதோ உயரப் பார்த்தீர்களா எவ்வளவு பெரிய வௌவால் தொங்குகிற தென்று.

கோ-வ-ம் —பெண்ணே! இதென்ன விஷய விசேஷம்.

கண்-வ-ம்—நாதா! என்னைப் பறிமுதல் செய்யவந்த பதகரிவர்கள்.

கோ-வ-ம்—பெண்ணே! இவர்களோ தங்கள் குட்சிவாதையின் பொருட்டே திருட வந்திருப்பர். ஆதலால் இவர்களுக்கு இவ் விதக் கடுஞ்சாபம் கொடுப்பது கருணைக்கழகல்ல. கண்மணீ! இவர்களைச் சாபத்தினின்று நீக்கி நல்ல புத்திமதிகளைப் போதித் தனுப்புவதே பொறுமையை நிலைநாட்டி நலம் பயக்கும் புண்ய மாகும் பொற்கொடியே.

கண்-வ-ம்—நாதா! அவ்வணமே செய்கிறேன். —"நிலையாது"— பொல்லாக் கயவகுண புல்லர்காள் நீவிர்நேர் "எல்லாரும் முன் போலாவீர்"

திருடர் யாவரும்—(முன் போலாகி) ஆத்தா யீஸ்பரீ. கும்புடுரோம் தாயே. இந்தாங்க ஒங்கநவைங்கள்லாம் வாங்கிக்கங்க மன்னிக்க னும்.

கண்-வ-ம்—சரீ நீங்கள் இனிமேல் பஞ்சமா பாதகத்திலொன்றுன களவைக் கனவிலும் கருதாது வாழ்வீராக சுபம்.

திரு-வ-ம்—அம்மணீ! அப்புடியே செய்ரோம் போய் வாரோந் தாயே (போய் விடுகிறுர்கள்.)

கோ-வ-ம்—கண்ணகீ! வெய்யல் தணிந்துவிட்டது செல்வோம் புறப்படு.

கண்—நாதா! இதோ வருகிறேன்.

கோ—

மகாஸ்தலமும் அதோ தெரியுது என்ற வர்ணமெட்டு.

பல்லவி.

அதோ தெரிஇகி றதே மதுரைப் பதி. சுப
ஆட்சி யாமீ னுட்சி வளர்தல மெதி (ரதோ தெரிஇ)

அநுபல்லவி.

இதோப தேச நிதோதயநேர்
பதாகை மக ரதோரண மழகியநகர் (அதோ)

சரணம்.

அண்டாதியர் கண்டானந்தப் பூசை யகமகிழ்வோடு
கொண்டாடிடு கண்டாமணி யோசை கணகணவென

யதிர் சோ பித மேவிய சுக
நிதி சேர் வித மேவிய நக (ரதோ)

(செல்லுகின்றனர்)

## மதுரைமா நகரின் ஓர் வீதி.

காட்சி கண்காட்சியே என்ற வர்ணமெட்டிற் சேர்க்கை

பல்லவி.

ஆலவாய் க்ஷேத்ர மே.
அதியற் புத மிகு
மதுரைப் பதியெனு (மாலவாய்)

அமைந்த மருக் கமழ்ந்த கன
அடர்ந்த திருக் கடம்ப வன (ஆல)
அரண் பெறும் பரம் பொருள்
சரண் புகும் வரம் பருள் (ஆல)
அறிக்கை சிறக்க பெருக்கநத்தி
பிறக்க இருக்க இறக்கமுத்தி (ஆல)
ஆடலறப தோடுசதுர
நீடுஹரவி சேட மதுர (ஆல)
ஆன்ரோர் போற்ற நித்தியத்துங்க
மூன்றி யேற்ற முத்தமிழ்ச்சங்க (ஆல)
அழகிய ஸ்ரீமான் மிய நீட வானே
தழுவிய நான் மாட கூட லான (ஆல)
ஆனதி லேறிடு மீஸ்பர வைகை
மாநதி சூழ்தரு மாசறு முய்கை (ஆல)
அண்டர்களுங் கண்டு தவம் செய்திடு
அண்டு புகழ் கொண்டருளைப் பெய்திடு (ஆல)
ஆதித் வாதச் சாந்தப் பதியென
ஓதத் தீதின் பாந்தப் பவமறும் (ஆல)

அநுபல்லவி.

சாலோக சாமீப
சாரூப சாயுட்சந்தருகிற (ஆல)

சரணம்.

விண்டலந்தனைத் தழுவும் விகித கோ புரமும்
விற்பனர்கள் சொற்பெறுநற் பொற்புறு சிகரமும்
அண்டரும் மதிக்கத்தக்க ஆலயநாற் புறமும்
அடுக்கடுக்காகக் கோட்டை யமைந்த சித் திரமும்

அங்கம் புளகாங்கிதமே தங்கும் படி
அற்புத வாத்தியங்கள் முழங்கும் தூவி
எங்கினுஞ் சூரியன்போல் விளங்கும் பார்த்
திறைஞ்சி நிற்பவர்க்கிங்கருள் பொங்கும்

இந்திரன்மா லோகம்
இதன் வாசலோர் பாகம்
சுந்தர முற் சாகம் சொலும்
தோத்திர வீரண கீர்த்தனைவைபோக (ஆ)

கோ-வ-ம்—ஏ கண்ணகி! ஒப்புவமையற்ற செப்பரும் புகழ்பெற்ற நற்பிரபலமுற்ற இப்புண்ணிய மதுரையம்பதியின் மேன்மை தங்கிய மான்மியங்களையுரைக்கவெனின் மிகவிரியும். பெண்ணே! நாம் வந்து வெகு நேரமாகிவிட்டது. நானோ சிலம்பை விற்று மீளவேண்டும் ஆதலால் "கர்த்தனுண்டெல்லோர்க்கும் காவல் செய்ய" எனினும் தக்க மனிதரின் ஆதரணையில் உன்னை வைத்துச் செல்லவேண்டும். கூட இட்டுச்செல்லவும், தனியே விட்டுச்செல்லவும், என் மனம் இசையவில்லை. இதோ சமீபத்தில்

மஞ்சுநிகர் குந்தளமின்னே என்ற வர்ணமெட்டு.

இராகம் மோகனம் தாளம் ரூபகம்.

கண்ணிகள்.

நேமமோடு மாமறை யோது நீதிகள் சூழும் வேதியர் வாழும்
நீள் தெருவோர் வீட்டிலிப்போது இரு
நேயமாக நான் போய்வரும் வரை
நாயகி யந்த ஆயனுமின்று
நிட்சயமாய் ரட்சிப்பான் மாதே நெகிழ்வதேனே மகிழ்வாய்த்தானே
நீ விடை கொடுப்பாயிப்போதே.

வ-ம்—கண்மணீ. நான் வரும் வரை நீ இந்த அக்ரஹாரத்திலொரு வீட்டிருந்தால் நலமென்றெண்ணுகிறேனே.

கண்-வ-ம்—பிராணேசா! தங்கள் சித்தம்போல் இருக்கத் தடையில்லை ஆனால் தாங்கள் கூறிய பிராமண வர்க்கத்தினப்பெருமான் பெருமாட்டிகளோ தமிழர்களை மிகவும் கேவலமாக நினைப்பவர்கள் தன் நலங்கருதும் "கன்னெஞ்சப் பார்ப்பனர் "கருணை யென்பதே திரணமுமில்லா கடுஞ்சித்தமுடைய கொடுஞ்சினக் கோபிகள் ஆதலால் அன்னவர்களின் அன்பில்லா அகத்தில் தரிக்க என்னகம் சிறிது பின்னடைகிறது நாதா.

கோ-வ-ம்—பெண்ணே! வாஸ்தபம். "முப்பழமொடுபாலன்னம் முகங்கடுத்திடுவாராயின்" பிரயோஜனமென்ன?

ஆறுமுகவடிவேலவனே கலியாணமும் என்ற வர்ணமெட்டு.

கண்ணி.

சாதுர்யமேவுமென் நாயகியே மனச் சஞ்சலமுமேனடி இந்த க்ஷத்திரியர்வீட்டிலேயிருப்பாய் சென்று சடுதியில் வாரேனடி.

கண்-வ-ம்—நாதா! க்ஷத்திரியர் உத்தம குணமுடையவர்களென்றாலும் அவர்கள் அதிகாரத்திமிரை யநுஸரித்த அகத்தினைக் கொண்டுள்ளவர்களாதலால் அவர்கள் இல்லத்தும் இருக்கச் சகிக்கவில்லை மன்னிக்கவும் பிராணப்தே.

கோ-வ-ம்—உண்மை. கண்மணீ!

வெள்ளிமலை யோத்தபலமேடை என்ற வர்ணமெட்டு.

கண்ணி.

வைசியர்கள் வீட்டிலிருப் பாயே. மன
வாட்ட மற்றுத் தேட்டமோடு நீயே. செய்
வர்த்தகப்புராதனத்தின் உத்தமர்கள் உன்னைப்பேணு
வாரே. நான்போய் வாரேன். (வைசி)

கண்-வ-ம்—இன்னுயிர் நாயக! நம்மினத்தினர்களாகிய வைசியர்களிடத்தில் இவ்வித எளிய கேவலமான நிலைமையில் செல்ல எனக்கு மனம் கூசுகின்றதே இவ்விதமாக மறுக்கின்றேனென்று சினமுறாது க்ஷமிக்கவும் நாதா.

கோ-வ-ம்—காந்தாமணீ! ந்யாயம்.

செந்தின்மா நகரந்தனில் மேவிய என்ற வர்ணமெட்டு.

கண்ணிகள்.

அந்த நாளில் வை குந்தனுங் கண்ணனாய்
அவதாரம் செய்த நற் கோத்ரம் அருந்
தவதார தம்ய சற் பாத்ரம் மிகு

அன்பிலங்கித தும்புமிங்கித
இன்ப மங்களா சம்ப்ரமம்பெறு
யாதவர்களின் ஆதரவு தனில்
ஆயிழையேயிருப் பாயே. நான்
போய் வருவேன் பொறுப்பாயே.

கண். ஷை மெட்டு.

எந்தன் நாதரே சந்தேகமென்பதே
யேது மில்லாதிங்கு தானே இந்த
யாதவர் வீட்டினில் நானே தங்கி
யின்றிருப் பேன்நீர் சென்று விற்றது
மென்றன் முன்வரு கின்றவரையிலும்
எற்றியே வழி பார்த்திருப்பேன் சரி
இப்போதே செல்லுவீர் கோனே தடை
செப்பாதுத் தாரந்தந் தேனே.

வ-ம்—பிராணபதி! இப்போது தாங்கள் தெரிவித்தபடி யாவர்களும் புகழும் ஈவிரக்கமிக்க கோவலர்களாகிய "யாதவர்களின் இல்லத்திலிருப்பதே நலம்"

மறை யோதுவார் முதலாம் வருணங்கள் மாண்புபெற
முறையாக வூணினறு நெய்யும் பாலு மோர் பிறவும்
நிறைவாக வேண்டிய வெல்லா முதவிய நீதியினாற்
குறையாத செல்வரிவ ரென்ற பேறவர் கோகுலரே, அன்றோ

பசித்தார்முகங் கண்டு பால் தயிரீய்ந்து பராமரிக்கும் பரம தயாகுண பரிதர்களான யாதவர்கள். ஒப்புடன் முகமலர்ந்து உபசரித்துண்மை பேசி உப்பில்லாக் கூழிட்டாலும் உண்பதே யமிர்தமாகும்' என்ற வாக்யத்தின் உண்மையை உலகத்துக்கு விளக்கிக் காட்டும் உத்தம இயல்பையுடைய "கோபாலர்" நடுக்காட்டிலும் தம்மை யடைந்தோர்க்கு "இல்லை" யென்னாது "பால்" கொடுத்துப் பசி தணித்தனுப்பும் பண்புடைய பாக்கியர்களாதலால்" "அமுதர்" என்றும் உலக வழக்குகளில் பொது விருந்து நடுவறிந்து புகல்பவராதலால் "பொதுவர்" இடையர்" என்றும் "கோன்" என்றும் சிறப்புப்பெயர்களை யடைந்துள்ள" யாதவ மரபினரின் வீட்டில் இருக்க என் மனம் பூரணமாக சர்வ சம்மதத்தை யடைகிறது நாதா.

(இவர்கள் பேசிக்கொண்டிருக்கும் வழியாக ஒரு கோபால யாதவ குலமாது வருகிறாள்)

கோ-வ-ம்—கண்ணகி! அதோ ஒரு பெண் யாதவகுலத்தைச் சார்ந்தவர்கள் போல வருகிறார்கள் யாரென்று விசாரிக்கிறேன். (திரும்பி) அம்மா. தாங்கள் யாரோ?

யாதவப்பெண்—ஐயா! நானொரு "கோபாலகுல யாதவப்பெண்" எங்கள் குலமூர்த்திக்கு நெய், பால், தயிர் ஆராதனை செய்வதற்காகச் சென்றுவருகிறேன். நீங்கள் யார்?

கோ-வ-ம்—அம்மா நானொரு வர்த்தகன், இவள் எனது பத்னி, இந்தச் சிலம்பை விற்க ஊருக்குள் சென்றுவரவேண்டும். அதுவரை யிவளைத் தங்கள் குழந்தையைப்போல் பாதுகாத்து வைக்க வேண்டும். மேலும் இன்னவளுடைய கோரிக்கையின் படியே தெய்வத் திருச்செயலால் தங்களைச் சந்தித்தோம் அம்மணீ! கருணை செய்யவேண்டும் கதியொன்றுமில்லாது கதறும் இவளைக் காத்தி ரட்சிக்கவேண்டுகிறேன் தாயே.

யாதவ-வ-ம்—ஐயா! தாங்கள் பாஷிக்கும் தீனகுரலின் தன்மையானது நீங்கள் ஏதோ மிகவும் துயரத்திலாழ்ந்திருப்பதாக எனக்குத் தெரியப்படுத்துகிறதே காரணம் என்னவோ? ஐயா! கோவிலிலுள்ள மீனாக்ஷியையும் சோமசுந்தரேசரையும் போலிருக்கும் உங்களுக்கு என்னதான் மனக்குறைவுகள் ஏற்பட்டவோ வென்பதையறிய மிகவும் அவாவுகிறேன். தெரிவிக்கலாமோ?

கோ-வ-ம்—அம்மா! உங்கள் குலத்துக்கேற்ற குணத்துக்கும் அன்புக்கும் சந்தோஷிக்கிறோம். தாயே! செல்வீக சம்பன்ன கோபால

## நொண்டிச் சிந்து.

### கண்ணிகள்.

யாதவகுலத்துதித்த . நல்ல
ஆற்றல்மிகும் ஆய்ச்சியரே போற்றிச் சொல்லுவேன்
மாதவரருள் பரவும் புகழ்
மட்டில்லாத காவிரிப்பூம் பட்டினமதில் .

வைசிய மரபில் வந்த  உயர்
மாச்சாத்வன் செட்டியென்று  மாக்ஷிமைமிகும்
ஐஸ்வர்ய வணிகபிரான்  பெற்று வளர்த்து
ஆவலுறு புத்ரனென்பேர்  கோவலனேன்பார்

திண்ணமிகு மென்மாமன்  மாநாய்கன்
செட்டி பெற்ற இன்ன முதக் கட்டியாகும் நல்
கண்ணகி யிவளம்மா  அறியாக்
கன்னிப்போதில் மாங்கனியைத் தின்னக்கொடுத்து

மாசிலா மணமுடித்தேன்  திருக்கடையூர்
மாதவியைச் சதிருக்ககப்  போதழைத்தனர்
தாசியா மாதவியின்  மோகவலே
தன்னிற் சிக்கியே யிருந்தேன்  அன்னவளுடன்

பனிரண்டு வருடமாக  அந்த
பாவையொடிருந்து சொத்து  யாவுமிழந்து
இனுமவள் தனக்குக்கடன்  பட்டு
இச்சிலம்பை விற்கவந்தேன்  பக்ஷமுடனே

மாலே சூட்டி சென்ற முதல்  தன்னே
மறுமுறை பாராததால்  அருமையுடன்
காலேயிலென் னுடன் வந்தாள்  இன்று
காட்டில் மிக்கக் கஷ்டப்பட்டு  வாட்டமுமுற்றுள்

ஆதலா விச்சிலம்பை  ஊருக்குள்
யாண்டு விற்று மீண்டுவர  வேண்டுமெதனுல்
காதலி யோரிடத்தில்  தனியாய்
காத்திருப்பதெப்படியென்  ருத்திரப்பட்டாள்

இதுதான் செய்தியம்மா  கெதி
யேதுமில்லே யாதரவு  ஒதிடுமம்மா
இதுதான் செய்தியம்மா!

வ-ம்—அம்மணீ! இதுதான் எனது சவிஸ்தாரம் நான் இம்மதுரைக்குட்சென்று இந்தப் பொற்சிலம்பை விற்றுவரவேண்டும். அதுவரை என் பத்னியை இந்த இடத்தில்வைத்துச் செல்லவேண்டும். இவளோ தர்மகுணமிக்க யாதவ இல்லத்திலன்றி மற்றெங்குமிரேனென்கிறபடியால் நான்சென்று மீண்டுவரும்வரை இவ

ளைச் சம்ரக்ஷிப்பது தங்கள் கடமை. தாயே! இவளுடைய பாது காப்பின்பொருட்டுத் தாங்கள்செய்யும் இந்நன்றியை என்று மறவேன்.

யாதவப்-வ-ம்—ஐயா! தாங்கள் இதைப்பற்றிக்கவலைப்படவேண்டாம். தாங்கள் திரும்பிவருமளவும் என்னால் இயன்றவரை கண்ணை யிமைகாப்பதுபோல் காத்தோப்பிக்கிறேன். வாருங்கள் இதோ என் வீட்டுக்குப்போவோம். (வீட்டுக்குட் செல்கின்றனர்)

## யாதவ இல்லம்.

(மாதரியாகிய யாதவப்பெண் கோவலன் கண்ணகிக்கு உபசாணை செய்து முடிந்தபின்.)

கோ-வ-ம்—ப்ரியசுந்தரி! காலதாமதமாகிறது ஆதலால் என்,

நல்வாக்கு நீ கோடடி என்ற மெட்டு.

இராகம் சங்கராபரணம் தாளம்—ஆதி.

கண்ணிகள்.

கண்ணகா விடை கொடடி காற்சிலம்பு விற்று வா
கண்ணே சிலம்பை விற்று கடுகி வருவேனடி (கண்)

கண்—
ஷ்டி
மண்ணோர் புகழுமெந்தன் மன்னவரே நான் வருவேன்
அண்ணலே கூட்டிச் செல்வீர் அன்புடனே என்னையுந்தான் (ம)

கோ—
ஷ்டி
பேதமை யென்பதுவே மாதர்க்கணிகலனென்
றோதும் மொழியை யின்று உன்னிடமே நானறிந்தேன் (க)

கண்—
நாதா நீர் சென்றவிடம் ஓர் தீதேயணுகிவிட்டால்
மாது எவ்வாறறிவேன் மயங்குதே எந்தன் மனம் (ம)

வ-ம்—நாதா! இச்சிலம்பை என் காலினின்றும் கழற்றுங்கால் "மதுரைக்குச் சென்றால் விபத்து நேரும்" என்று கூறிய அசரீரி வாக்கையும் மறுத்து மதுரைக்கே வந்து விற்கப்போகின்றீர் இதனால் ஏதாவது தீங்கு நேரிடும் பக்ஷத்தில் அதை நான் எவ்வாறு அறிவேன் அதற்காகவே தங்களுடன் வருகிறேன் எனக்கேட்டு வேண்டிப் பிரார்த்தித்து மன்றாடுகின்றேன். பிராணபதீ! தடைசெய்யாது அழைத்துச் செல்லுங்கள்.

கோ-வ-ம்—பெண்ணாமுதாய கண்ணகா! நான் தனியே சென்றேனுகில் எனக்கு ஏதாவது தீங்கு நேரிட்டால் அதை நீ எப்படி அறிந்துகொள்வதென்று கலங்குகிருய் கண்ணே! கலங்க வேண்டாம்.

(திரும்பி யாதவப் பெண்ணிடம் மெள்ள ஏதோ சொல்ல அவள் வீட்டுக்குள்சென்று தீபம், தேங்காய், மாங்கனி, நீர் நிறைந்த செம்பு,பெட்டி,புஷ்பம்,சந்தனம்இவைகளைக்கொணர்ந்துவைக்கிருள்)

என்பிரிய அன்புமிக்க இன்பநாயகமே! அன்று நீ மணப்பெண்ணுக இருந்து நான் உன்னை மாலை சூட்டிய அந்தக்காலத்திலே திருமணவரையின்கண் சுமங்கிலிய வாழ்க்கையின் பிரமேயத்திற்காகப் பெரியோர்களால் நிர்ணயிக்கப்பெற்ற சுபமங்கள வஸ்துக்கள் (அவள் கொண்டுவந்துவைத்த பொருள்களைக்காட்டி) இவைகளே. ஆதலால் தற்போது நான் இந்தச்சிலம்பை விற்கச்சென்ற இடத்திலே யேதாவது என் ஆயுளுக்கு மிருத்யு நேர்ந்து அதனுலே நீ சுமங்கல்ய வாழ்வினின்று நீங்கப்பெற்று அமங்கலியாகநேருமாயின் ஆதியில் சுமங்கிலிய வாழ்க்கையின் அறிகுறிப் பிரமேயமாக வைக்கப்பெற்றிருந்த

இராகம்-சங்காபரணம்—தாளம்.

கண்ணிகள்.

இந்தத்தேங்காயுடையும்　　எரிவிளக்கிருளடையும்
பிந்த மாங்கனியழுகும்　　பின்பூவாடி விழுகும்
சந்த னமுலர்ந்துவிடும்　　தண்ணீர்குறைந்துகெடும்
சொந்த ப்பெட்டியுடையும்　　தோகைநீயறிந்துகொள்வாய்.

அன்றியேநான்வைத்துச்செல்லும் அடையாளங்களிலொன்றும்
குன்றும லேயிருந்தால்　　கோதின்றிமீண் டுவருவேன்
மன்றுளடையாளங்கள்　　மாறிவிடில் மான்விழியே நான்
பொன்றிமுடிந்தேனென　　பூவையேஉணர்ந்துகொள்வாய் (கண்)

வ-ம்—கண்ணே! சர்வலோக சரண்யனுன சாக்ஷாத் ஈச்சுரக்கிருபையின் முன்னிலையிலும், உனது கற்புமகிமையின் முன்னிலையிலும் இதைஉறுதியாகவைத்துக்கொண்டு சந்தோஷமாக விடைகொடு

கண்-வ-ம்—ஹா! நாதா. நாதா.　　(சோர்வடைகிருள்)

கோ-வ-ம்—(தாங்கிப்பிடித்துத் தெளிவித்து) கண்மணீ! கவலையடையாதே. "ஊக்கமது கைவிடேல்" என்ற வாக்கியத்தை எண்ணிப்

பார். கலங்காதேகாதலீ! (யாதவப்பெண்ணைப் பார்த்து) ஆதரவற்ற எங்கட்கு அருந்தெய்வம்போலவந்த

அடைக்கலமே அடைக்கலமே என்ற வர்ணமெட்டு.

இராகம்-ஆரபி — தாளம்-ஆதி.

பல்லவி.

அம்மணியே அம்மணியே
அடைக்கலமிவளுந்தன் இடத்தினில் வைத்துச்செல்வேன் (அம்)

அநுபல்லவி.

செம்மைநிலைக்கத்தர்மம் செழிக்கும் யாதவகுல
தேவியேயிப் பாவையையுன் காவலில்விட்டேயகல (அம்)

சரணம்.

பூவிலெந்தனைமணம் புரிந்ததன்றியே ஒரு
பொழுதும்சுகித்தறியாள் பழுதில்லாதவள் பெரு
மூவுலகத்தும்புகழ் முதிரிம்மதுரைத் தெரு
முற்றுஞ்சுற்றியுஞ்சிலம்பை விற்றுவரும்வரை திரு (அம்

(கண்ணகியைப் பிடித்தபடியே பரிதாபத்தோடு)

பல்லவி.

கண்ணகியே கண்ணகியே
கலங்கிடாதுஇருநான் சிலம்பைவிற்றுவருவேன் (கண்)

(கோவலன்கையைப் பிடித்தபடியே மிகு துயரத்தோடு அழுது)

கண்— ஷை

மன்னவரே மன்னவரே
வருவீர்சிலம்பைவிற்று ஒருவினடியிலெந்தன் (மன்ன)

(இருவரும் துக்கத்தோடு கட்டித்தழுவி யிருமுறை பிரிந்துகூடி பார்த்தபடியே பிரிகின்றனர்)

## மதுரைமாநகர் ஓர் வீதி.

வஞ்சிப்பத்தன்—(என்னும் பொற்கொல்லன்) வசனம்—ஐயோ தெய்வமே! இப்படியும் துன்பப்பட்டிடவிட்டாயே. ஈசனே. ராஜபத்னியின் சிலம்பு போனவிபரம் ஒன்றும் புலனாகவில்லையே. கொல்லையிற் காயவைத்திருந்த சிலம்பு எங்கேதான்போய்விடும். இதற்குமுன்னெல்லாம் வேறு எத்தனையோ நகைகளை நான்

பசையூட்டிக் காயவைத்தெடுக்கவில்லையா! இதுமட்டும் மாயமாய் மறைந்துவிட்டதே இன்று சாயந்திரத்திற்குள் கொண்டுபோய்க் கொடுக்காவிட்டால் அரசனான பாண்டியன் எனது சிரசைவாங் கிவிடுவதாக ஆக்கினை செய்திருக்கிறானே. என்னசெய்வேன் ஆஹ. (கோவலன் அவ்வழியாகச் சிலம்பை விலை கூறிக்கொண்டு பிரவேசிக்கின்றான்)

கோ— கண்ணிகள்.

தேவியென்கண்ணகி சீர்பாதத்திலிட்டசிலம்பு நிறை
திங்கள்முகங்கொளும் பெண்களணிந்திடும்சிலம்பு
தேவடியாள்கடன் தீர்த்திடவந்த பொற்சிலம்பு
தேவையானபேர்கட் காவல்பெருக்கிடும் சிலம்பு

கற்புக்கரசியாங் கண்ணகிகாலணி சிலம்புரத்னச்சிலம்பு
அற்புதச்சிலம்பு தங்கச்சில்ம்பு பொன்னின்சிலம்பு
வைரச்சிலம்பு மாணிக்கச்சிலம்பு வைடூர்யச்சிலம்போ
சிலம்போ சிலம்போ சிலம்பு வாங்கலையோ
சிலம்போ சிலம்பு

வஞ்-வ-ம்—ஐயா வர்த்தகரே! நீர் எந்த ஊர், இங்கு வந்த வரலா றென்ன?

கோ-வ-ம்—ஐயா! நான் காவிரிப்பூம்பட்டினம் ஒரு வணிகமரபி னன் என் பெயர் கோவலன். இந்தச்சிலம்பைவிற்கவந்துளேன்.

வஞ்-வ-ம்—யாருடைய சிலம்பு?

கோ-வ-ம்—எனக்குச் சொந்தமானதே.

வஞ்-வ-ம்—(தனக்குள்) சரி. கடவுள் நமக்கு நல்லகிருபை புரிந்திருக் கிறார். இதுதான் தக்கதருணம். (திரும்பி) ஐயா இந்தச்சிலம்பு அதிக விலைதாளும்போலிருக்கிறதே இதன் விலை யென்னவோ? சொல்லலாமோ கொஞ்சம்.

கோ-வ-ம்—ஐயா! நான் பத்துலக்ஷம் பவுன் கடன்பட்டிருக்கிறேன். அதைத் தீர்ப்பதற்காகவே இதை விற்கவந்திருக்கிறேன்.

வஞ்-வ-ம்—ஐயா! இவ்வளவு விலைகொடுத்து வாங்கத்தக்க ஆட்களும், தனிகர்களும் இந்த ஊரில் அரசனையன்றி யாரும் இருக்கிறார்க ளென்று எனக்குத் தெரியவில்லை. நானே பாண்டிய ராஜாங்

கத்தில் தங்கம் பொன் வேலை செய்யக்கூடியவன். ஆதலால் நீங்கள் சொல்லும் விலைக்கு அரண்மனையில் விற்றுத்தருகிறேன் எனக்கு ஏதாவது, பிரயாசை தக்ஷிணை—

கோ-வ-ம்—ஐயா! அப்படியெல்லாம் இல்லை. எனக்கு வேண்டியது பத்துலக்ஷம் பவுன். அதற்குக் குறையத்தான்கூடாது தவிற அதற்கு அதிகமாக விற்றால் அதைத் தாங்களே அடைந்து கொள்ளலாம் தடையில்லாமல்.

வஞ்-வ ம்—ஓஹோ குத்தகை வியாபாரம் போலும், சரி. அப்படியானால் வாருங்கள் அரசனிடம் போகலாம். அவனுக்குக்கூட ஒருசிலம்பு தற்போது தேவைதான். (இருவரும் போகிறார்கள்)

பாண்டியராஜ சபா மண்டபம்.

(அரசன் சிம்மாதனத்திலிருந்தபடியே மந்திரிகளோடு சம்பாஷித்துக்கொண்டிருக்கிறான்.)

பாண்டியன்-வ-ம்—சரீ! மிக்க ஆனந்தமெய்தினேன். ஆகவே நமது ராஜ்யத்தின்கண் யாதொரு குறைவுமில்லை என உரைக்கின்றீர்.

நன்மதி மந்திரி-வ-ம்-வேந்தே! உண்மை. அதாவது ஊண் "அட்டுண் பாரின்றி ஆதுலரின்மையால் இட்டுண்ணுக்குறை யென்பதோ ரேக்கமே" என்றபடி நமது நாட்டின்கண் சகல பிரஜைகளும் தாந்தாமே தமக்கு வேண்டிய உணவுகளைச் சுயார்ஜிதமாய்ச் செய்து வாழ்க்கைநடத்தும் செயலையுடைய இயல்பினர்களாகவே இருப்பதால் தானதர்மங்கள் ஒருவர் ஒருவருக்குக் கொடுக்கவேண்டுமெனில் அத்தானங்களைப்பெறத்தக்க ஆதுலர், தரித்திரர், இரவலர் என்னும் பதத்திற்குரியவர்கள் இல்லாததால் "ஐயமிட்டுண்" என்ற நீதியின்படி இட்டுண்ண முடியவில்லையே என்ற குறைவைத்தவிர நமது தேயத்தின்கண் பிறிது விஷயாதிகளில் "குறைவு" என்னும் வார்த்தையே குறைவு.

பா-வ-ம்—ஆதாலால் நமது தேயத்திலே யாவரும் செல்வர்களேயன்றி நல்கூர்ந்தாரே இல்லை.?

ந-ம-வ-ம்—அரசே! நம் அரசாங்கத்திற்குட்பட்டமட்டில் "இல்லை" என்போரே இல்லை.

பா-வ-ம்—குதூகலம்பிரதான்! அமர்வீராக! சொன்மதுரபாஷித நன்மதியூக மந்த்ரீ! ஒருவாரத்துக்குள் கொண்டுவந்து கொடுப்ப

தாகவும், அப்படிக் கொடுக்காவிட்டால், நம்மால் விதிக்கப்படும் ஆக்கினைக்கு உட்படுவதாகவும் சொல்லிச்சென்றுள்ள வஞ்சிப்பத்தன் இதுவரையும் சிலம்பைக் கொண்டுவந்து கொடுக்கவில்லை யாமே?

ந-ம-வ-ம்—ஆம்; யாதோ காரணம் தெரியவில்லை.

(கோவலனை அழைத்துக்கொண்டுசபையில் வஞ்சிப்பத்தன் பிரவேசிக்கிறான்)

இதோ வந்துவிட்டான் வஞ்சிப்பத்தன்.

வஞ்-வ-ம்—மகராஜ்! வஞ்சிப்பத்தன்; நமஸ்காரம் செய்கிறேன்.

பா-வ-ம்—ஏ ஆசாரி! எங்கே சிலம்பைக் கொண்டுவந்தாயா?

வஞ்-வ-ம்—ப்ரபூ!

வந்தவேளையிது நல்லவேளை என்ற வர்ணமெட்டு.

இராகம்-தேசிகபியாக்—தாளம்-ஆதி.

கண்ணிகள்.

சீல மிகுந்திடும் தெய்வானுகூலத்தால்
தேடிய முள்நமது காலினில் தைத்தது
போலே இதோஇந்த பொல்லாத்திருடனை
போனபொருளோடு நான் கொணர்ந்தேன்.

வ-ம்—அரசே! இந்தச் சண்டாளத் திருட்டுப்பயலை,

ஷ

லேசாய் மதிக்கப் படாது திருடிய
லெக்கிலே விற்கவே வந்த பலே
ஆசாமியைநேர் விசாரித்தின் றேதக்க
ஆக்கினைகள்செய் தனுப்பவேண்டும்.

வ-ம்—மகராஜ்! திருட்டுச்சொத்தோடு, ஆசாமியையுங்கொண்டுவந்து விட்டேன், இதோ; இவன் கையிலிருப்பதே நமது ராணியின் சிலம்பு.

பாண்-வ-ம்—ஓய்! நீர் யார்? இந்தச்சிலம்பு உனக்கெப்படிக் கிடைத்தது? உன் வரலாறென்ன உண்மையைச்சொல்.

கோ-வ-ம்—நன்மைமிக்க தென்மதுரையையாளும் ராஜேஸ்வர பூபதியே! என் ஊர்-காவிரிப்பூம்பட்டினம். பெயர்-கோவலன். எனக்கேற்பட்ட ஓர் காலவித்யாஸத்தின்பலனாக எனதுபத்னியின்

கார்சிலம்பை விற்கும்பொருட்டு இம்மதுரையையடைந்தேன். இங்குவந்து தெருவில் சிலம்பை விலைகூறிவரும்சமயம் இந்த ஆசாரியார் சந்தித்து ஏதோ!,—தான் அரண்மனையில் தங்கம், பொன் வேலைசெய்யும் சமஸ்தானத்தொழிலாளி யென்றும், சிலம்பு ஒன்று தற்போது அரண்மனையில் தேவையாக்வுமிருக்கிறதென்றும் கூறி இதை விற்றுத்தருவதாக என்னை இங்கு அழைத்துவந்தார்; தவிர யாது மறியேன்.

நன்-ம-வ-ம்—ஓஹோ! அப்படியானால் சிலம்பின் விலையென்ன?

கோ-வ-ம்—பத்துலக்ஷம் பொன்னுக்குக் குறைந்தாலும், கூடினாலும் கொடுக்கமுடியாது.

நன்-ம-வ-ம்—கூடினாலும் கொடுக்காத காரணம் என்ன?

கோ-வ-ம்-பத்துலஷம்பவுன்தான்கடன்,அதைத்தீர்க்கத்தான்விற்பது

நன்-ம-வ-ம்—பத்துலக்ஷம் பவுன் கடன்? ஓஹோ! ஹூம்; யாரிடத்தில் கடன் பட்டிருக்கிறீர்?

கோ-வ-ம்—ஐயா! சிலம்புவேண்டுமெனில், விலைகொடுத்து வாங்க வேண்டும், இல்லையென்றால்,என்னைத் தாமதியாமல்அனுப்பிவிட வேண்டும். மற்றவிஷயங்களைத்தாங்கள்என்னைக்கேட்கவும், நான் அதற்குப் பதில்சொல்லவும் பிரமேயமில்லை. ஆயினும், ராஜசமுகமானதால் தெரிவிக்கிறேன். நான் கொடுக்கவேண்டியது, திருக்கடையூர் மாதவியென்னுந்தாசிக்கு (துன்மந்திரியும், வஞ்சிப்பத்தனும் ரகஸ்யம்பேசிக்கொள்கிறார்கள்.)

பா-வ-ம்—(வஞ்சிப்பத்தனைப்பார்த்து) ஏ வஞ்சிப்பத்தா! என்ன? நீ சொல்வதற்கும், இவர்சொல்வதற்கும் வித்யாசம் அநேகமாகத் தோற்றுகிறதே; உண்மையைச்சொல்லு.

வஞ்-வ-ம்—ஐயனே! திருடர்களின் சாகஸம் தாங்களறியாததோ? வேணுமென்றால்; நமது அந்தப்புரத்திற்கு இந்தச்சிலம்பை அனுப்பி அம்மணியவர்களுடையதா? அல்லவா? என்று கேட்டுத்தெரிந்துவரும்படிசெய்துபாருங்கள் உண்மைவிளங்கும்.

பா-வ-ம்—அடே சேவகா! தெரிந்துவாசீக்கிரம்.

(சேவகன் சிலம்புகொண்டுசென்று மீண்டுவந்து)

சே-வ-ம்—ப்ரபூ! நமது அரசியிடம் இந்தச்சிலம்பைக்கொடுத்தேன் அவர்கள் காலில்போட்டவுடன் எரிவெடுக்கிறதாகச்சொல்லிக்கொடுத்துவிட்டார்கள்.

பா-வ-ம்—ஏ ஆசாரி! என்னசொல்லுகிறாய் காரணம்?

வஞ்-வ-ம்—மகாராஜா! புதிதாகச்செய்தது அப்படித்தான்சிலதினத் துக்கு இருக்கும், பிறகு சரிப்பட்டுப்போகும்.

ந-ம-வ-ம்—அரசே! இந்த ஆசாரி இதற்குமுன்செய்துகொடுத்துள்ள சிலம்புகளும், நகைகளும் அப்படி எரிவெடுத்ததாக இல்லை. மேலும்; இந்தச்சிலம்பு புதிதாகவும்காணப்படவில்லை. காலில்போட்டுப்பழகித் தேய்வுபட்டதாக நன்குதோற்றுகிறதே. (வாங்கிக் காண்பித்து) இதோ பாருங்கள் தேய்வு.

பா-வ-ம்—இதற்கென்ன சொல்லுகிறாய்?

வ-வ-ம்—இந்தத்திருடன் இதையெடுத்துச்சென்றதும் அடையாளத்தைமாற்றுவதற்காக மணல், கல் முதலியவைகளில் தேய்த்திருக்கிறான்; அப்படியில்லாவிட்டால் திருடின இடத்திலேயேசிலம்பை விற்கவருவானா?

து-ம-வ-ம்—ஓய் வியாபாரியாரே! இது "உம்முடைய சிலம்புதான்" என்றுநம்ப எப்படிச்சந்தேகம்தெளிவது?

கோ-வ-ம்—எப்படி உமக்குச் சந்தேகத்தைத்தெளிந்துகொள்ள இஷ்டமோ? அவ்வகையில் எனக்கும் சம்மதம்.

வஞ்-வ-ம்—கொதிக்கிறநெய்யில் சிலம்பைப்போட்டு இவனைக் கைவிட்டு எடுக்கச்சொன்னால் தெரியும்.

ந-ம-வ-ம்—அப்படியானால் சிலம்பு அரண்மனையைச்சார்ந்ததென்று நிரூபிக்க நீரே நெய்க்குள் கையிட்டு எடுக்கலாமே.

து-ம-வ-ம்—இல்லையென்பதற்குச் சத்தியமா? உண்டு என்பதற்குச் சத்தியமா? நான் "திருடவில்லை" யென்றுதானே சத்தியம்செய்வது வழக்கம் (திரும்பி) வர்த்தகரே! பிரதிவாதிகேட்டுக் கொண்டபடி சத்யம்செய்யஇஷ்டமா உமக்கு?

கோ-வ-ம்—ஆஹா! தடையின்றிச்செய்கிறேன்.

(உடனே காய்ந்துகொதிக்கும் நெய்க்கொப்பரையில் சிலம்பைப்போட்டு எடுக்கச்சொல்கின்றனர்)

ஹேஈசனே!, (மேனோக்கி) ஈசனே! நீ யென்னைஇவ்வாறுசோதிக்கவும் நினைந்துவிட்டனையோ? நீ உண்மையானதெய்வமானால், இவர்களின் முன்னிலேயே, என்னை நிரபராதியென்று நிரூபிக்கின்றாயா? பேதிக்கின்றாயா? என்று நான் உன்னைச்சோதிக்கின்றேன். (சோர்ந்து)

ஹா கண்ணகி! நீ கணவனை தெய்வமெனக்கருதியுய்யும் நெறிதவராக் கற்பினளாயின் உன்கற்புநிலையே; என்னைக்காப்பாற்றும். களங்கமற்ற

உத்தமிகண்ணகியே என்ற வர்ணமெட்டு.

கண்ணி

கற்பிற்சிறந்தவளே என் கண்ணகிப் பெண்மணியே—என்னைக்
கற்பனை யாகவே கள்ளனென் கின்றார்கள் காத்திடவேணுமடி

(கையை நெய்க்கொப்பரையிலிடுகிறான் நெய் சுடா
திருக்கவும் சிலம்பை யெடுத்துக் கொடுக்கிறான்.)

ந-ம-வ-ம்—இனியாவது சந்தேகந் தீர்ந்ததா?

வ-ப-வ-ம்—ப்ரபூ! இவன் மகாதந்திரக்காரனாகையினாலே அக்கினிக் கட்டு மந்திரங்கற்றிருப்பான். சிலம்பைப் பாம்புக்கூட்டிவிட்டு அதை இவனை எடுக்கச்சொன்னால் சாயம் வெளுத்துவிடும்.

(அப்படியே செய்கிறார்கள்)

கோ— ஷை கண்ணி.

தெய்வ நிகர்த்தவளே அடி தேவியென்கண்ணகியே —இந்தத்
தென்னவன் முன்னுந்தன் மன்னன் படுந்துயர் தீர்த்தாளவேணுமடி

(பாம்புக்கூட்டில் கையிடுகிறான், பாம்புகள் ஒன்றும்
செய்யாதிருக்கவும் சிலம்பைஎடுத்துக்கொடுக்கிறான்)

வஞ்-வ-ம்—இவன் ராஜதிருடனானபடியால் கையிலே கருடக்கொடி வைத்திருப்பான், புலிக்கூட்டில்போட்டு எடுக்கச் சொன்னால் பொய் நிஜம் புலனாகிவிடும். (அப்படியே செய்கிறார்கள்.)

கோ— ஷை கண்ணி.

மஞ்சுறு மாமயிலே மாநாய்கன் செட்டிமகளே —இந்த
வஞ்சிப்பத் தன்செய்யும் வஞ்சகத்தைநீக்க வந்தாளவேணுமடி

(புலிக்கூட்டில் கையைவிடுகிறான், புலிகள் ஒருதீங்கும்
செய்யாதிருக்கவும் சிலம்பை எடுத்துக்கொடுக்கிறான்)

பாண்-வ-ம்—மந்திரிகளே! என்னதெரிவிக்கின்றீர்கள்? இனியிதற்குத் தக்கபடி யோசித்து நியாயத்தைக்கூறுங்கள்.

நன்-ம-வ-ம்—ஐயனே! இவ்வியாபாரியைக் கவனிக்குங்கால் திருட்டுக் குணமுடையவராகக் கிஞ்சிற்றும் தெரியப்படவில்லை; மற்றும்; நம்மால் ஆக்ஞாபிக்கப்பெற்ற பரிசீலனைகளினின்றும் இவர் திருடரல்லவென்றே நான் அபிப்பிராயப்படுகிறேன்.

துன்-ம-வ-ம—வேந்தே! ஒருவனை உருவத்தால்மட்டும் நல்லவன், கெட்டவன் என்று அறிவதசாத்யம். இவனோ! தாசிக்குக் கடன் பட்டு அந்தக்கடனைத்தீர்ப்பதற்காகத் தனது மனைவியின் காற்சிலம்பைவாங்கிவிற்கவந்ததாகச்சொல்கிறான். அவ்விதம்; பஞ்சமா பாதகத்திலொன்றான "காமம்" என்ற வினையிலீடுபட்டுத் தாசிலோலனாகத்திரியும் இந்தச்சண்டாளன், கொலையும்செய்யப் பின் வாங்கமாட்டான். மேலும்; தன்னைவிட்டுப்பிரிந்து தாசிவீட்டுக்குச்சென்று திரிந்துழலும் புருஷனுக்கு அவனது மனைவி தனது காற்சிலம்பைக்கழற்றித் தாசிக்குக்கொடுக்கச் சம்மதிப்பாளோ? இது இவனுடைய பத்தினியின் காற்சிலம்பு என்கின்றானே, அவள் இவனுக்குக்கொடுப்பாளா? தாசிக்குக்கொடுக்க; என்பதை மட்டும் சற்றுயோசித்துப்பாருங்கள்.

பாண்-வ-ம்—ந்யாயந்தான் நீர் சொல்வது.

நன்-ம-வ-ம்—பூபதே! தாங்கள் அதைஉண்மையென்று ஒப்புக்கொள்வது என்மனதுக்குச் சமாதானத்தைக்கொடுக்கவில்லை. கண்ணாற்பார்ப்பதும்பொய், காதாற்கேட்பதும்பொய், தீர்க்கவிசாரிப்பதேமெய்; என்றபடி "இருவர்தம்வழக்கையும் யெழுதரங்கேட்டே, இருவரும்பொருந்த உரையாராயின், மனுமுறைநெறி, யின் வழக்கிழந்தவர்தம் மனமுறமறுகிநின்றழுதகண்ணீர், முறையுறத் தேவர்மூவர்காக்கினும், வழிவழியீர்வதோர் வாளாகும்மே" என்றும், ஆய்ந்தோர்ந்து பாராதகாரியம்தான் சாந்துயரந்தரும் என்றும் உள்ள நீதிவாக்கியங்களை நன்கு எண்ணிப்பாருங்கள். நிற்க; இந்த எத்தனாகிய வஞ்சிப்பத்தன் நமது சிலம்பை எங்கோ போக்கடித்துவிட்டு, நிரபராதியான இவரைக் காட்டிக்கொடுத்துத் தன்னைக் காத்துக்கொள்வதற்காகவே இவ்வாறு சொல்கிறானென்று நான் நிட்சயமாகச்சொல்வேன் இவ்வஞ்சிப்பத்தன் வார்த்தையை உறுதியென்றெண்ணிவிடக்கூடாது. "ஏழையழுத கண்ணீர் கூரியவாளையொக்கும்" என்பது பொய்யாமொழியென மெய்யாக நம்புக.

துன்-ம-வ-ம்—அரசே! இவர் எப்பொழுதும் நான் கூறுவதற்கெல்லாம் எதிர்மாறுபேசுவதென்றே கங்கணங்கட்டியுளார்போலும்? இவருடைய வார்த்தையைச் சந்நிதானம் செவிகொள்ளாது கையுங் களவுமாய்க் கண்டுபிடித்துக் கொண்டுவந்திருக்கப்பட்ட இந்தத் திருடனுக்குத் தக்கதண்டனை கொடுக்கவேண்டும்.

பாண்-வ-ம்—(சிறிதுநேரம் யோசித்திருந்துவிட்டு) சற்றும் அச்சமின்றி அரண்மனை நகையைத் திருடிய இவனை உடனே ஊருக்குத் தென்புறத்திலுள்ள கொலைக்களத்தில்கொண்டுபோய் சிரச்சேதம்செய்துவிடுங்கள்.

(உடனே கொலையாளிகள்வந்து அழைத்துச்செல்கிருர்கள்.)

## கொலைக்களப் பாறை.

(கொலையாளிகள் சோர்ந்து நிற்கின்றனர்.)

கோ-வ-ம்—கொலையாளிகளே! உங்களால் என்உடலைச் சேதிக்கவியலாது, நானே என்னுயிரை மாய்த்துக்கொள்ளுகிறேன்; சற்று விலகுங்கள். (என்றுஉடைவாளைவாங்கிவைத்துக்கொண்டு) இரு (கரங்களையுங்கூப்பிக்கொண்டுமேனேக்கி) ஹேஈசனே! ஈசனே!! யாதொருபாபத்தையுமறியாத நிரபராதியான என்மேல் அபவாதமாகப்பெரும்பழியைச்சூட்டி, வஞ்சச்சித்தனுனவஞ்சிப்பத்தன் என்னை இவ்விதத்துன்பத்திற்காளாக்க, நான் முன் ஜன்மத்திற் பெரும் பாதகத்தைச்செய்திருக்கவேண்டுமென்றே எண்ணுகிறேன். இன்றேல், இந்தஜென்மத்திலே என்மனமறிய யாதாமொரு சிறுபிராணிக்கேனும் தீங்குசெய்ததாகஞாபகமில்லையே. அந்தோ! தக்க பரிசிலனையானசத்தியங்களால் நிரபராதியென்று நிரூபித்ததின் ந்யாயத்தையும் அரசன் அறியாதுபோனது என ஊழ்வினையே.

இதற்குமுன் இம்மதுரையம்பதியிலே, அரசுசெலுத்திவந்த பாண்டியர்களுக்கு ந்யாயாந்யாயங்களை அவ்வப்போது கனவிற்றோன்றித்திருவாய்மலர்ந்தருளிவந்துள்ள, ஹேசோமசுந்தரக்கடவுளே! அம்மாதிரி இந்தப் புன்மதிகொண்ட நெடுஞ்செழிய பாண்டியனுக்கும் என்பொருட்டிரங்கியாவது தெரிவித்திருக்கக்கூடாதா?

ஆஹா! துன்மதிமந்திரியின்சொன்மதிகேட்ட புன்மதிப்பாண்டியனுக்கு நன்மதிமந்திரியானவர் எவ்வளவோ அரும்பெருநீதிகளையெடுத்தோதியும், அவன் என்னைக்குற்றவாளியென்றே தீர்மானித்துவிட்டானன்றே? உண்மையில் நிரபராதியாகவிருந்தும் குற்றவாளியென்று பெயரேற்று "மானமழிந்தபின் வாழாமைமுன்னினிதே" என்றபடி நான்என்உயிரைவிட்டுவிடப்பின்னிடைந்தேனில்லை; ஆனல் நான் இவ்விதத்தில் ஆவிபிரிவேனுகில், உலகத்தில் என்னைத் திருடனென்றுதானே, எண்ணுவார்கள். ஐயோ! கடைசிகாலத்தில், இப்ப

டிப்பட்ட இழிவான நிந்தைக்குட்பட்ட கெட்டபெயருடனு? உயிரை இழக்கவேண்டும்; என்ற எண்ணமே என் நெஞ்சைப் பிளக்கின்றது.

ஐயோ! தெய்வமே! மாலைசூட்டியமுதல் பன்னிருவருடமாக என்னுடையமுகத்தைக்கூடப் பாராதிருந்துவிகிதமனுப்பி எனையழைத்து அன்போடுபசரித்துநின்ற (என்) கண்மணியாகியகண்ணகி, நான் சிலம்பைவிற்கச்செல்கின்றேனெனத்தெரிவித்தவுடனே, ஆற்ருெணுத் துயருற்ருெங்கி எனைத்தொடர்ந்துவந்து இந்தமதுரையிலே யாதவப் பெண்ணின் இல்லத்தில் தங்கியிருந்து, பின் நான் ஊருக்குட்சென்று சிலம்பைவிற்றுவருகிறேன்; என்றுசொன்னவுடனே எனது பிரிவாற்ருது அவள்பட்ட துயரத்தையும், துக்கத்தையும், கலக்கத்தையும் அளவிடற்கரிதோ? பிறகு, பெரிதும் தியங்கிமயங்கிய பரிதாபநிலையில் நின்றவளைத்தேற்றி, பெண்ணே! சீக்கிரத்தில் மீளுகிறேன், கவலுருதே! எனக்கூறி, கற்புக்கருங்கலக் காரிகையான கண்ணகியின் கண்ணீரை என் கரத்தாற்றுடைத்துப் பிரிந்துவந்த நான் இவிடத்திலே, இவ்விதநிலையிலிருக்கின்றேன் என்று,

(கண்ணி)

யார் போய்ச் சொல்லு வா ர்

ஆயிழை கண்ணகிக் கோ டி (யார்போய்ச் சொல்லுவா ர்)

வ-ம்—நான் கண்ணகியிடத்தில் விடைபெற்றுக்கொண்டு பிரிந்து சென்று, எனது ஆருயிரனைய கண்ணகியான,

ஷை

ஆரணங்கின் சிலம்பை அடைந்தலைந்துவிற்க, இவ்

வூரின்நடுவேவந்த போது நேர்ந்த சூது தனை (யார்)

வ-ம்—கணிகை மாதவியின்கடனைத் தீர்ப்பதற்காகக் கற்பரசியான கண்ணகியின் காற்சிலம்பை விற்கவந்த இந்தத் தருணத்திலே; காலசனிபோல எதிர்தோன்றி, களவுகுற்றத்தை என்மேற்சாற்றிய, மகாச் சண்டாளனுன வஞ்சிப்பத்தனின் வார்த்தையை நம்பி இந்த,

ஷை

மாமதுரையையாளும் வழுதிநெடுஞ்செழியன்

தீமையானஆக்கினை யிட்டான் கொன்று விட்டான் என (யார்)

வ-ம்—இவ்விதமாகப் பாண்டியன் ஆக்கினையினுலே, இவிடத்திலே, என்னுடைய ஆன்மாவைப் போக்கிக்கொள்வேணுகில், திருக்கடையூரில்வாழும்என் அன்பின்உருவமானமாதவியிடம்சென்று பெண்ணே மாதவி! உன் கடனைத் தீர்ப்பதற்காக, தனதுபத்னி

யான கண்ணகியின் காற்சிலம்பை விற்கும்பொருட்டுத் தென் மதுரைசென்றிருந்த கோவலனை வஞ்சிப்பத்தனென்னும் கர்ம குலப்பாபி ஒருவன் வஞ்சித்து, உனக்கு விற்றுக்கொடுக்கவந்த சிலம்பை மோசமாகப் பாண்டியன் அபஹரித்துக்கொள்ளும்படி செய்துவிட்டான். அவ்விதம் பொருளை அபஹரித்துக்கொண்டு அவனை மீளவிட்டிருந்தாலும், உன்னிடம்வந்து விஷயத்தைச் சொல்லி, மறுபடியும் எவ்விதத்திலாவது நிக்ஷயமாக உன் கடனைத் தீர்த்திருப்பான், அவ்விதமுமின்றி அதேபாண்டியனின் ஆக்ஞைப்படியே கோவலன்,

பூமியிலவனுயிர் பொன்றியேஇந்நாளினில்
எமனுலகமதை யடைந்தான் ஆயுள்
முடிந்தான் என (யார்)

ஆசிரிய விருத்தம்.

பரவுசீர் காவிரிப்பூம் பட்டினத்து வைஸ்யகுல
பாக்கிய மாசாத்து வான்
பாலனாய் ஜெனித்தந்தக் கண்ணகியை மணமுடித்த
பவிசினைநினைந்தழு வனே
காவிசையாய் மாதவி யெறிந்திடு மாலையென்
கழுத்துற்ற தற்கழு வனே
கணிகையின் பின்சென்று பனிரண்டு வருடங்கள்
கழித்ததற் கேயழு வனே
இரவு பகலாகவே யென்மீதே நினைவுறும்
யேந்திழை யாங்கண் ணகி
எழுதிய நிருபமதைக் கண்டங்கே செலவிடை
யீயென மறத்து என்போல்
விரவுபொற் பதுமையொன்று தந்தபின் மாதவி
விடைகொடுத் தனுப்ப நானும்
விரைவுடனே ரேகிடும் எந்தனை மறித்தங்கு
விளித்திட, மோச மாக
அரவுகடித் தததாங்கள் வருகவென வரைந்தொரு
ஆளினை யனுப்பி யழைத்து
அத்ததிபத்துல க்ஷம்பொன்தந் தகலென
அப்படியே நான் சத்தியம் •

தாவுமே எனையனுப்பக் கண்ணகியைக்கண்டு
சார்ந்தசெய்கைக் கழுவனோ
தையலின் காற்சிலம்பைவிற்க விந்நகரினில்
தனித்திட்டதற் கழுவனோ
வரவுமே வஞ்சிப்பத்தன் எனையழைத்தே செய்த
வஞ்சத்தை நினைந்தழுவனோ
வழுதியின் முன்செய்த சுடுநெயொடு பாம்புபுலி
வகைச் சோதனைக் கழுவனோ
புரவலன் பாண்டியன் கெய்தவிக்கேடான
புண்மையைநினைந் தழுவனோ
பொன்பதந் தந்தருள் நம்பினேன் சந்ததம்
போற்றி மீனாக்ஷி யுமையே.

(தானே உடைவாளால் தன் ஆவியை மாய்த்துக்கொள்கிறான்)

## யாதவப்பெண் இல்லம்.

(கண்ணகியைத் தெற்றிக்கொண்டிருக்கிருள்.)

யாத-வ-ம்—அம்மா சீக்கிரத்தில்வந்துவிடுவார் இதற்காக நீ வருந்திக்கொண்டேயிருக்காதுசந்தோசமாகதாகசாந்திசெய்துகொள்கண்ணகி.

தாயையும்விட்டுத் தனித்திருந்தால் என்ற வர்ணமெட்டு.

கண்ணிகள்.

கண்— எந்தனி ஞயகர் இன்னும் வரக்காணேன்
இன்னலென் நேர்ந்ததோ தாயே

யாத— வந்திடுவாருந்தன் மன்னவருமிங்கு
வருந்தாமலே யிருப் பா யே

கண்— கண் ணுந்துடிக்குதே கண்டேன்பொல்லாக்கனு
காரண மேதோ யென் தா யே

யாத— திண்ணமீதுன்நாதர் நன்னயமாய்வந்து
சேருவார் கண்டிடு நீ யே

கண்— எவ்விதந்தேற்றியும் என்மனம்பதைத்து
ஏங்குதே யென்செய்வேன் தா யே

யாத— அவ்விதமானாலே அன்னோர்வைத்துச்சென்ற அடையாள
மாறிற்றோ சே யே

(கண்ணகிசென்று அடையாளம் மாறியிருக்கக்கண்டலறிவிழுந்து.)

கண்ண்கா விடைகோடடி என்ற மெட்டு.

கண்ணிகள்.

தேங்காயுடைந்திட்டதே திருவிளக்கணைந்திட்டதே
மாங்கனி யழுகிப்போச்சே வைத்தபுட்பம் வாடலாச்சே

எந்தன் மணவாளர்க்கு இன்னலென்ன நேர்ந்ததுவோ
சிந்தை கலங்கிடுதே சேயிழையானென்ன செய்வேன்
இந்த அடையாளங்கள் இவ்விதமே மாறியதால்
வந்ததென்ன தொந்தரையோ? மங்கை நானறிகிலேனே. (தே)

யாத-வ-ம்—கண்மணீ! (எடுத்தணைத்துக்கொண்டு) வருந்தாதே, அடையாளம் மாறியிருக்காது, நன்றாகப் பார்த்தாயா?

கண்—அம்மணீ! (அடையாளங்களைக்காட்டி) இதோ; 'தாங்களே பாருங்கள்; சிலம்பை விற்கப் போகும்போது எந்தன்'—

நீ வீசும் பாசத்திலே என்ற வர்ணமெட்டு.

இராகம் தேசிகம்-தாளம் ஆதி.

கண்ணிகள்.

நாயகர் வைத்துச்சென்ற தூய அடையாளங்கள்
மாயமாய் மாறிக்காணுதே. மங்கித்தோணுதே (மாய)
என்ன எந்தன் நாதருக்கே. இன்னல் வந்ததென்றறியேன்
கன்னியே இதுவும் என் விதியோ?
காலகெதியோ?, கன்னியே இதுவுமென்விதியோ? (நாய)

வ-ம்—அடையாளங்களெல்லாம் மாறியிருப்பதால் என் நாயகருக்கு என்ன விபத்து நேர்ந்ததோ? தெரியவில்லை; அம்மா! அம்மா!! என் உடல் தளருகின்றதே; ஆவி சோருகின்றதே, அம்மா! அம்மா!! நான் என் செய்வேன், இத்தருணத்தில் தாங்களே எனக்கு மாதா, பிதா, குரு, தெய்வம்; அன்றி யாருமில்லை; வெளியிற் சென்று, விஷயத்தை யறிந்து வந்தால் உங்களுக்கு மிகுபுண்யம் அம்மணீ! அம்மணீ!! சென்று வாருங்கள்.

யாத-வ-ம்—அப்படியே சென்று பார்த்து விசாரித்து வருகிறேன்; வருந்தாமலிரு அம்மா!

(போய், கோவலன் பாண்டியனால் வெட்டுண்ட சங்கதியை அறிந்து திரும்பிவந்து எப்படி யுரைப்பதென்றெண்ணி)

அம்மா! மயங்காதே? உன் நாதன் சுகமே வருவார்; நான் அவரைச் சந்தித்தேன், அவருக்கு யாதொரு தீங்கும் நேரவில்லை; கூடிய சீக்கிரம் வருவார்.

கண்-வ-ம்—(அவள் பொய் சொல்கிறாளென்று அறிந்து)

கன்றுக்குப் பாலைவிடாமல் என்ற வர்ணமெட்டு.

கண்ணிகள்.

ஓஹோஹோ! யென்னிடம் பொய்யை யுரைத்ததால்
உன் வீடெரிந்திடப் போகுது பார்

உள்ளபடியே நீ உண்மையைக் கூறு
தொழித்தால் முடியாது என்பதைத்தேர்
உளத்தினி லாரென்றே எனைத்தான் நினைத்தாய் (ஓஹோ)
(யாதவப்பெண் வீடு தீப்பற்றுகிறது உடனே)

**ஷை கண்ணிகள்.**

யாத— ஆஹாஹா உண்மை யறைந்திடுவேனின்று
அன்பாகக் கேட்டு அருள்புரிவீர்
அரசனும் பாண்டியன் ஆக்கினையாலுங்கள்
ஆளன் மடிந்தே கிடக்குகின்றார்
அணைப்பாய் பொறுத்தே மனைத்தீய் தனைத்தான் (ஆஹா)

கண்-வ-ம்—என்ன, என்ன? (பதறித்துடித்து) அம்மா! நன்றாய்க் கூறுங்கள்.

யாத-வ-ம்—அம்மா! உன் கணவன் பாண்டியனுக்கிணையால் மட்டப்பாறைக் கொலைக்களத்தில்'—ஐயோ! ஆ! அம்மா! வெட்டுண்டு'—

(என்று சொல்லி முடிக்கு முன் திடீரென்று அடியற்ற மரம் போல் கீழே விழுந்து)

கண்-வ-ம்—ஆ! நாதா!! (என்று ஓலமிட்டு மூர்ச்சித்துத்தெளிந்து கீழே கிடந்தபடியே ஏங்கி துக்கத்தோடு)

இராகம்-சஹானா—தாளம்-ரூபகம்.

(கடவுளை முன்னிலைப்படுத்தி.)

ஐயோ இனியென்ன செய்குவேன் தெய்வமே
யாரைத் துணை நம்பி வாழ்வே னே (ஐ)

வையக மீதினில் உய்யவும் கூடுமோ
வாழ்வோன் மடிந்தபின் பெம்மா னே (ஐ)

(பத்தாவான கோவலனை முன்னிலைப்படுத்திப் புலம்பிக்கொண்டே ஏழ்கிறாள்.)

கன்னி யெனைமணந்து பன்னீரு வருடமாய்க்
காணாதுகண் டேனே கோமா னே (ஐ)
என்னைத் தனிவிட்டு மன்னாநீர் சென்றது
ஏற்குமோ உலகுக்கென் சீமா னே (ஐ)

(யாதவப்பெண்ணைப்பார்த்து)

நீ இப்போது என்னிடம் உண்மையை உரைத்ததால் உன் வீடு முன்போலாகிவிட்டது பார். என் நாதனை இப்போது எங்கு யார்க்கலாம்?

யாத-வ-ம்—இவ்வூருக்குத் தெற்கிலுள்ள மட்டப்பாறையின்மீது வெட்டுண்டுகிடக்கிறார் அங்கேபோனால் பார்க்கலாம்.

(உடனே கண்ணகிக்கு ஆவேசமுண்டாகிறது.)

அப்படியும் அவள் தடுத்தாளா என்ற வர்ணமெட்டு.

கண்ணிகள்.

ஆஹா நானிதோ செல்லுகிறேன்
அப்பாண்டியன் தனைச் சொல்லுகிறேன்
அந்யாயஞ்செய்த துன்மார்க்கன்குடல்
தன்னையேவாயால் மெல்லுகிறேன். (ஆஹா)

(தலைவிரிகோலமாய் உக்ரத்தோடு செல்கிறாள்.)

## கொலைக்கல மட்டப் பாறை.

(சேதிக்கப்பட்டுக்கிடக்கும் கோவலனை உயிர்க்கும்படி கடவுளைப்ப்ரார்த்திக்கின்றாள். கரங்கூப்பிநின்று.

மணிபுரம் விட்டோம் என்றமெட்டுத் துரிதம்.

கண்ணிகள்.

அதிபுகழ்சூழும் மதுரையில்வாழும்
அம்மணியே சொக்கேஸ் பரரே
ஆயிழையென் நாயகர்தன்
ஆவியைப்பெற்றெழச் செய்குவிரே
ஆஹா அதன்பின் னாகவே பாண்டிய
அரசனிடமே செல்லுகின்றேன். (அதிபுகழ்)

(உடனே கோவலன் உயிர்பெற்றேழ்கிறான். எழும்போதே கண்ணகியைக்கண்டு.

இராகம்-தேசிகசுருட்டி—தாளம்-ஆதி.

கண்ணிகள்.

கண்ணகியோ மாதவியோ காண்பவளாரடி
கண்ணகியானால் கடக்கப்போ மாதவியானால்மடிமேல்வா (க)

கண்— ஷ

பழனங்கொண்டவள் கண்ணகியாள் பலனடைந்தவள் மாதவியாள்
பழனங்கொண்டவளிங்குவந்தேன் பலனடைந்தவளேன்வருவாள்

கோ— ஷ

மகிழ்ந்தவளோ மணந்தவளோ வந்தவளாரடி
மகிழ்ந்தவளானால் மடிமேல்வா மணந்தவளானால் விலகிப்போ (ம)

கண்— ஷ

கோயில்கொண்டவள் கண்ணகியாள் கும்பிட்டுக்கொண்டவள் மாதவியாள்

கோயில்கொண்டவ ளிங்குவந்தேன் கும்பிட்டுக்கொண்டவ
ளேன்வருவாள்　　(கோ)

கோ-வ-ம்—(சிறிது விழித்துப்பார்த்து மயக்குத்தெளிந்தபின்) ஓஹோ! நாம் இவிடத்திலே உயிர் துறந்தன்றோகிடந்தோம். எப்படி எழுந்தோம்; (திரும்பி நன்கு பார்த்து) ஏ கண்ணகி! உன்னை நான் யாதவர்களின் வீட்டிலன்றோ அடைக்கலமாகவிட்டுவந்தேன்; நீ இங்கு ஏன் தனித்துவந்தாய்?

கண்-வ-ம்—நாதா! சிலம்புவிற்கவந்த தாங்கள் இந்த இடத்தில்,

இராகம்-கமாஸ்—தாளம்-ஆதி.

கண்ணிகள்.

கற்பாறையி லேயுறங்கக்　　காரணம் யாது
கண்ணகியான் வந்தேனதைக்　　கூறுமிப்போது
பொற்பாருமென் மன்னவரே　　பூமியிலும்மை　　இப்
புன்மைசெய்தபேரையுயிர்போக்குவேன் உண்மை　　(கற்)

வ-ம்—நாதா! இதென்ன கொடுமை! காரணம்?

கோ-வ-ம்—கண்ணகி! நான் உன்னிடம் விடைபெற்றுச்சென்று சிலம்பை விலைகூறிவருந் தருணம் இவ்வூர் வஞ்சிப்பத்தன் எள்பவன் தான் சிலம்பை விற்றுத்தருவதாகத் தெரிவித்து அழைத்துப்போய் பாண்டியன்சமுகத்தில்விட்டு, திருடனைச் சிலம்போடு கொண்டுவந்த தாகச்சொன்னான்; அங்குள்ள நன்மதிமந்திரியானவர் எவ்வளவோ நீதிகளை எடுத்துச் சொல்லியும் கேளாது துன்மந்திரியின் துற்போ தனைக்கிசைந்து பாண்டியன் என்னைச் சிரச்சேதம் செய்துவிடும்படி கட்டளையிட்டுவிட்டான்; அப்படியே அவன் கட்டளையும் என்னா லேயே நிறைவேற்றப்பெற்றது கண்மணீ.

கண்-வ-ம்—ஆஹா அப்படியா செய்தான்? சண்டாளப் பாண்டியன்; சரி இப்போது தங்களுக்குஎன்னவரம்வேண்டும்? சீக்கிரம் தெரிவியுங்கள்.

கோ-வ-ம்—　　விருத்தம்.

தூண்டியே என்னைக்கொல்ல　　சூக்ஷிசெய்வஞ்சிப்பத்தன்
பாண்டியனொடு துன்மந்த்ரி　　பதகியாங் கோவிலங்கி
யீண்டிவர் நான்குபேரும்　　யேங்கி யேமாயுமாறு
வேண்டினே னதுபோலின்று　　வியன்வரந்தருவாய்நீயே.

கண்-வ-ம்— ஆவேச ஆக்ரோஷத்துடன்) அப்படியே தந்தேன். முன்போலாகக்கடவது. (கோவலன்முன்போலாகமடிந்துவிடுகிறான்)

அப்படியும் அவள் தடுத்தாளா என்ற வர்ணமெட்டு.

கண்ணிகள்.

அப்படியே அங்கு　　சென்றிடுவேன்
அந்நீதர்களை　　வென்றிடுவேன்

சொர்ப்பனப்போதிலும் எந்தனைநினைந்தால்
கெர்ப்பங்கலங்கிட நின்றிடுவேன். (அப்படி)

(அல்லோல கல்லோலத்துடன் அண்டம் நடுங்கச் சப்தித்துக்கொண்டு பாண்டியன் அரண்மனையின் சபாமண்டபத்திற்குள்பிரவேசிக்கின்றாள்)

## பாண்டியன் சபா மண்டபம்.

(மந்திரி முதலியவர்கள் சூழக் கொலுவிருக்கிறான். அத்தருணம்)

கண்ணகி— (ஆவேசத்துடன்) யாரடா அவன்! அடே. அடே.

பழிக்குப்பழி கோடடா என்ற வர்ணமெட்டு.

கண்ணிகள்.

படுபாவிப் பாண்டியனே! என்
பர்த்தாவைக் கொன்றவனே!
விடுவேனோ உந்தனைப் பழிக்குப்பழியாக
வீழ்த்தியே கொல்லுவனே.
தீர்க்க விசாரியாமல் நீ
தீர்ப்புச் செய்ததனால்
பார்க்குளே உந்தனைப் போன்றவரை வைக்கப்
படாது கொல்வேனிக்கால் (படுபாவிப்பாண்)

வ-ம்—அடே! பழிகாரப் பாண்டியா! நிரபராதியான என் நாதனை ஏன் அந்யாயமாய்க் கொன்றாய்? சொல். சீக்கிரம்; அதனால் உன்னைப் பழிவாங்க வந்திருக்கிறேன், என்ன தெரிவிக்கின்றாய்?

(வஞ்சிப்பத்தனும் துன்மந்திரியும் பயந்து நடுங்கிஓட வழிபார்க்க முயன்றும் வழி விடாததால் நின்று விழிக்கின்றனர்)

பாண்-வ-ம்—அவன் கையில் திருட்டுச் சொத்தான சிலம்பு இருந்ததால், கள்வனாகிய அவனைச் சிரச்சேதம் செய்யக் கட்டளையிட்டேன்.

காளிகாசொரூபமாய் நின்ற கண்ணகி-(பூர்வக்ஞானம் பிறந்து பாண்டியன் மனைவியின் சிலம்புதவறிய விபரத்தையறிந்துகொண்டு)

அடே, சண்டாளா! அவரிடம் இருந்து உன்னால் கைப்பற்றப் பெற்ற சிலம்பையும் உன் மனைவியின் மற்றொரு சிலம்பையும் நன்றாய்க் கவனித்து ஒத்துப்பார்! இதோ உண்மையில் தவறிய உன்னுடைய மனைவியாளின் சிலம்பை வரவழைக்கிறேன்.

(சிலம்பைத் தூக்கிச்சென்ற கருடனை வரும்படி நினைக்கிறாள்)

இராகம்-காம்போதி—தாளம்-ஆதி.

கண்ணிகள்.

இங்கிதமி குங்கருடா எந்தன் முன்னம் வாவா
எடுத்துச்சென்ற சிலம்பைக் கண்டால் தீர்ந்திடுமேதாவா

தங்கமாகும் அச்சிலம்பைத்     தானே கண்டாலின்றே
சந்தேகம்போம் பாண்டியனேச்     சங்கரிப்பேன்கொன்றே (இங்)

(கருடன் காலினுல் சிலம்பைத் தூக்கிக்கொண்டு பறந்து வருகிறது.)

இராகம்-எதிருலகாம்போதி. தாளம் ரூபகம்.

கண்ணிகள்

மாங்கலியமிழக்க     வைத்த பாவிச்சிலம்பே.
மங்கைகூப்பிட்டேனென்று, அருகு, வாராதே தூரநில்லு (மா)

தீங்குதனே விளேத்த, அதி,     தீச்சண்டாளச்சிலம்பே
தேவி கூப்பிட்டேனென்று, அருகு, சேராதே தூரநில்லு. (மா)
மணவாளனே மடித்த, மிகு,     வன்மைசேர் பொற்சிலம்பே
மாது அழைத்தேனென்று, அருகு, வாராதே தூரநில்லு (மா)

வ-ம்—(கருடன் கொண்டுவந்த சிலம்பை வாங்கினதும்) அடே பாதகப் பாண்டியா! இதோ பார்த்தாயா உன் மனேவியின் சிலம்பை, அந்த இரண்டு சிலம்புகளேயும் கொண்டுவா. உண்மை விளங்கச்செய்கிறேன். (பாண்டியன் இரண்டு சிலம்புகளேயும் கொண்டுவந்து கொடுக்கிருன்.) (கையில் வாங்கினதும்) கீழேபோட்டு ஒரு சிலம்பையுடைத்து) இதோ பார் என்னுடைய சிலம்பில் நவரத்தினங்கள் பதித்திருக்கும் (மற்றொன்றை உடைத்து) இதோ பார் உன் சிலம்பில் அவைகள் கிடையா அடே. வஞ்சிப்பத்தனிடம் சீர்திருத்தக்கொடுத்த சிலம்பை முன் பகையை முன்னிட்டு, வஞ்சிப்பத்தன் வீட்டுக்கொல்லேயில் கூடுகட்டியிருந்த இந்தக் கருடன் தூக்கிக்கொண்டு போய்விட்டது இதையறியாமலும் தீர்க்க விசாரியாமலும் இவ்விதம் கொடுஞ்செயல் புரிந்தீர்களே. சண்டாளர்காள்.

(என்று பாண்டியன் மீதிற் பாய்ந்து குடலே மாலேபோட்டுக் கொண்டு அப்படியே வஞ்சிப்பத்தன், துன்மந்திரி இருவரையும் கொன்று குடல் மாலே சூடிக்கொண்டு.)

இம் மதுரைமாநகரின் கண், நீதிநெறிதவரு வேதியர்களும் தர்ம சிந்தையுடையவர்களும், பசுக்களும், கற்பிற் சிறந்த உத்தமப் பதிவிரதைகளும், சன்மார்க்கர்களும், அடைந்தோர்க்கமுதளித்து அன்போடாதரிக்கும் அருண்மிக்க யாதவகுலத்தவர்களும் தவிரத் துன்மார்க்கர்கள் வாழும் இடங்களெல்லாம் தழல்பற்றி யெரிந்து சாம்பலாகக் கடவது.

(உடனே பல இடங்களில் தீப்பற்றுகிறது) ஊரிலுள்ள குடிகள் யாவரும் ஒருங்கு சேர்ந்து காளிகாஸ்வரூபக் கண்ணகியின் பாதத்தில் வீழ்ந்து பணிந்து.)

குடிகள் வசனம்—அம்மணீ! கோபத்தை மாற்றவேண்டும்.

எங்கிருக்கிருக்கிறுன் என்ற தசாவதார நாடக வர்ணமெட்டு.
இராகம்-இந்துஸ்தான் தோடி. தாளம்-ஆதி.

பல்லவி.

பாதம் பணிந்தோம்.
பாதுகாத்தெங்களையாளிப் போது போற்றியே உன்திருப் (பா)

அநுபல்லவி.

பாதிமதிசூடு சொக்க நாத பதிமேற் க்ஷமிக்க (பா)

சரணம்.

பாதக நெடுஞ்செழிப் பாண்டிய ஞலே
படுபெரு மோசம் வந்து சூழ்ந்ததிக் காலே
தீதகலும்படியே ஜெகமிதின் மேலே
சீர்த்திபெற வீரணசொற் கீர்த்தனத்தமிழிஞலே (பா)

வ-ம்—தாயே! க்ஷமிக்கவேணும். யாதொரு காரணத்தையும் நாங்கள் அறியோம்.

கண்-வ-ம்—நானே, காளிகாதேவி; பூர்வம். நான் வீற்றெழுந்தருளியிருந்த ஆலயத்துக்கு ஒரு காரணத்தை முன்னிட்டு இந்தப் பாண்டியன் விளக்குப் போடாதபடி உத்தரவு பிறப்பித்திருந்தும், ஒரு வாணியன் எண்ணே வியாபாரம் செய்து மீண்டு வீட்டுக்குவரும் போது எண்ணெய்ஊற்றித் தீபமேற்றிவருவதையறிந்த பாண்டியன், தன் ஆக்கினையை மீறினன் வாணியனென்று, அவனை என் ஆலயத்தின் சந்நிதியிலேயே வெட்டிவிட்டான் இதையறிந்த வாணியன் மனைவி என்னிடம் வந்துமுறையிட்டுவிட்டுத் தன் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு உயிரைமாய்த்துக்கொண்டாள். உடனே அந்தப் பழிக்குப் பழி வாங்குவதற்காக மீனுக்ஷி சுந்தரேஸ்பராளின் உத்திரவின்படி இப்பாண்டியனுக்கே, நான் இந்த விபரீதங்களுக்குக் காரணமான, சிலம்போடு புத்ரியாய் ஜெனித்தேன், சிலம்போடு பிறந்த குழந்தை ஆகாதென என்னைத் தங்கப்பெட்டியில் வைத்து ஆற்றில் விட்டுவிட்டான், பிறகு காவிரிப்பூம் பட்டினத்திலுள்ள மாணுக்கன் செட்டி என்னை யெடுத்து வளர்த்து வந்தான். அதேகாலத்தில் அந்த வாணியனை "கோவல"ஞகவும், அந்தவாணியச்சியே, "மாதவி"யாகவும் முறையே பிறந்து வளர்ந்தனர். அப்போது என்பொருட்டு மடிந்த வாணியனுக்கு நானே மனைவியாகி தற்போது பழிக்குப்பழி வாங்கி விட்டேன். இனிமேலிந்நகரைப் பரிபாலனம்செய்யவரும் "பாண்டிய குலசேகரன்" நீதிநெறி வழுவாது செங்கோல்செலுத்துவான். இனி இம்மதுரையம்பதி முன்னிலும்அதிக்ஷேமமாக சீரும் சிறப்பும்பெற்று நீர்வளம் நிலவளம்முதலிய நலங்கள் பெருகி செழிப்புற்றேங்குமாக; நான் யதாஸ்தான ஆலயத்தை நாடிச் செல்கின்றேன். சுபமே.

இரண்டாம்பாகம் சம்பூர்ணம்.



இந்நூலாசிரியராகிய, திருவாளர்,

வீ. எஸ். வீரணக்கோனாரவர்கள் இயற்றிய நூல்கள்.

## புராண தமிழ் நாடகங்கள்.

| | | | |
|---|---|---|---|
| சங்கீத கோவலன் | 1, 2, ம் பாகம் தனி தனி | | 0—4—0 |
| அல்லியரசாணி | ... | ... | 0—4—0 |
| சுபத்ரா திருமணம் | ... | ... | 0—4—0 |
| சந்தானு கங்கா | ... | ... | 0—4—0 |
| ஸ்ரீகிருஷ்ணலீலா | ... | ... | 0—4—0 |
| சிசுபால வதம் | ... | ... | 0—4—0 |
| சௌ. சௌ. ஐந்து சரித்திரங்கள். | ... | ... | 0—4—0 |

1-A
1-B

## நவீன நாடகங்கள்.

(சகல உரிமைகளும் பதிவு செய்யப்பெற்றவை.)

| | | | |
|---|---|---|---|
| விஜயேந்திரன் | ... | ... | 0-12—0 |
| சமணகரன் | ... | ... | 0-12—0 |
| சௌந்தராகாந்தா | ... | ... | 0-10—0 |

## பகவத் பக்திரச நூல்கள்.

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீபாலகிருஷ்ண பஜனார்ஜிதம்என்னும் | | | |
| அமிர்தகானம் | 1, 2, பாகம் | | 0—5—0 |
| கீதநவநீத கிருஷ்ணகானம் | ... | ... | 0—2—0 |
| பாலகிருஷ்ண பாமாலை (செய்யுள்) | | ... | 0—2—0 |

'ஸ்ரீபாலகிருஷ்ண விலாசம்'
அம்பலத்தாடி,
சிறுவாலை ஜெமீன்,
சமயநல்லூர் போஸ்ட்,
மதுரை ஜில்லா

மேற்கண்ட புத்தகங்களும், இன்னும் சகலவிதமானபுத்தகங்களும், மொத்தமாக வாங்குபவர்களுக்கும், வியாபாரிகளுக்கும் சகாயமானவிலைக்கு நேரிலும், வீ. பீ. மூலமும் கொடுக்கப்படும்.

**S. வேணுகோபால் நாயுடு,**
புக்ஷாப், புதுமண்டபம்,
மதுரை.